# ஆலயம்

---



"***இருப்பவர் நாமே***" என்று இயம்பிய இறைவனுக்கு
இறையன்பர் மோஸே- அன்பினால் எழுப்பிய
கூடாரக் கோயில்- இறைவனும் மனிதனும்
இன்புற்று உறவாடிய ஆனந்த அமைதியின் வாயில்



வாக்களிக்கப்பட்ட பூமியில்-ஆலயம் அமைக்க,
வாஞ்சையோடு வரம் கேட்ட மன்னன் தாவீதின் வேண்டுதலை
குருதிக்கறை படிந்த கரங்களால் வாழிடம் வேண்டாம்
நிராகரித்த அன்பிறைவன்

***இறைவனைப் புறந்தள்ளிடும் மானுடம் நடுவே***
***எதற்கு இல்லிடம் என்றோ-மன்னன்*** சாலமோன்
கட்டிய ஆலயத்தையும் பபிலோனிய மன்னன்
நெபுக்கத்நேசரைக் (II) கொண்டு இடித்தார்

மாமன்னன் சைரஸின் ஆசியுடன் (538 BCE)-எஸ்ரா
கட்டிய ஆலயமும் பல முறை நிந்தைக்கு ஆளாகிட-பெரிய
ஏரோதால் புனரமைக்கப்பட்ட பேராலயம் (20 BCE)
அரசியல் சதுரங்கத்தில் பகடைக் காயாய் மாறியது

***கள்வர் குகையாய் மாறிட்ட ஆலயம் கண்டு***
***கல்லின் மேல் கல் இராதபடி நிர்மூலமாகும்***
***கொதித்த இயேசு இட்ட சாபம்***
ரோம தளபதி டைடஸால் நிறைவேறியது.(70கி.பி.)



ராபாய் அகிளவின் முயற்சியை, கலிலியின் பூகம்பம்
முறியடிக்க , ஆலயம் அமைந்த இடத்தில்
உமையுட் கலிபா அபட் அல் மலிக் இபின் மர்வான்
எழுப்பிய  அல் அக்ஸா பள்ளி வாயில் (கி.பி.7)

இரு முறை பூகம்பத்தால் இடியுண்டு, சிலுவைப் போரில்
கிறிஸ்தவர்களால் கைப்பற்றப் பட்டு
சலாடின் மன்னரால் புனரமைகப்பட்ட மசூதி

***நிலம் தேடி அலைந்த மானுடம் நடுவே-***
***நிலையான இருப்பிற்கு இருப்பிடமும் ஏனோ?***
கொள்ள முடியாதவரை கொள்ளப் பல முறை கட்டிய
கோயில் இடிந்திட-எஞ்சியது அழுகைச் சுவரே

“தெரிந்து கொள்ளப்பட்ட இனம்” **தம்மை உயர்த்தி**
**சாதியத்தால் மற்றோரை இகழ்ந்திட**
இறைவனில்லா நாடு-கோயில் இல்லாக் காடாகிட
நாலு திசையும் அலைந்த யூதர்களை நாசம் செய்த ஹிட்லர்

வீடு திரும்பியவருக்கு-சோகம் சொல்லியழ ஆறுதலழிக்கும்
அழுகைச் சுவர் வாழ்வின் பிரதிபலிப்பானது.
வெல்ல முடியாத யூதரை வீழ்த்திட-பாலஸ்தீனியருக்கு
போரும் , பயங்கரவாதமும் நீதியானது



தம் ஒரே மகனைக் கொன்றும் மனம்
மாறாத மானுடம்-இன்றும்
காயீன், ஆபேலைக் கொல்லும் நிலை கண்டு
வேதனையில் மனம் நோகும் இறைவன்

அல் அக்ஸாவும்- அழுகைச் சுவரும், உருவில்லாக்
ஒரே கடவுளின் இரு பக்கங்கள்
இருமை கடந்தவர் இறைவனை கண்டார்
இருளில் மூழ்கித் தவித்தவரோ மதவாதம் புரிந்தார்

ஆன்மா லயம் பெறும் இடமே ஆலயம்-இருப்பவர்
நாமே என்றவருக்கு கல்லால் மண்ணால் எழுப்பிய
ஆலயங்கள் இடிந்து போயிட, உள்ளம் பெரும் கோயில்
ஊனுடம்பு ஆலயம், மானுடம் மறந்த கதையானது

உள்ளம் வாழ உவகை கொண்ட இறைவனுக்கு
ஆணவ உள்ளங்கள் மறுப்பைச் சொல்லிட
மதவாத நெருப்பில் அன்பை எரித்திட
கண் மறைந்துபோன இறைவன்

சைவமும் வைஷ்ணவமும் மோதியதும் வரலாறும், கொன்றழித்த
சமண , பௌத்த துறவிகளின் அவலமும் வேதனையானது
இந்து முஸ்லீம், கிறிஸ்தவம் கொன்று குவித்த மானுடம்
இறைவனை கூவியழைக்க எங்கே இறைவன் என்றானது?

சித்தனுக்கும், புத்தனுக்கும் ஆலயங்கள் தேவையில்லை
கள்வர் குகையாய் ஆலயங்கள் மாறிட காலவெள்ளத்தில்
மறைந்த மதங்கள்தான் எத்தனை ? வாழும் மதங்களும்
நாளை வாழும் என்பதற்கு உத்தரவாதம் ஏதுமில்லை

மாறுபடும் உலகில் எல்லாம் மாறிட
அன்பு, உண்மை, கருணையில் வாழும் இறைவன்

உண்மையும், அன்பும், அறமானால் மதங்கள் தேவையில்லை
அன்பாய், உண்மையும் வாழ்வானால்-தூதர்களும்
இறை அவதாரங்களும் தேவையில்லை, அபினியும்,
போதையுமான மதங்கள் பிரிவினையின் நச்சு விதைகளே!

உண்மையோ தெய்வீகம், அன்பே தெய்வம்
உண்மையே உனக்கு விடுதலை அளிக்கும் !
அன்பு வெள்ளத்தில் மூழ்கி-சத்திய ஒளியில் நடந்தால்
வாழ்வு சச்சித் ஆனந்தம்

உனக்கு நீயே ஒளி, உலகின் உப்பு நீ
உன்னையே நீ அறிவாய்

சுவர் நோக்கிக் கதறியோ, சூனியத்தை நோக்கி
தொழுது அழதோ, மானடரே பலன் என்ன?
அன்பில் நிலைத்து, சத்தியத்திற்கு சான்று பகிராவிடில்
வாழ்வில் அமைதியில்லை, தூய மனத்தவருக்கே
சத்திய தரிசனம் பொய்யில்லை

அன்பு மனங்களில் வாழும் இறைவனுக்கு
ஆலயங்கள் தேவையில்லை-இன்றும் நிதரிசனம்
சத்தியமோ தரிசனம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-28-09-2023

The **First Temple**, also known as **Solomon's Temple**, was a **biblical Temple** in Jerusalem. It is believed to have existed between the **10th and 6th centuries BCE**. Here are some key details about it:

1. **Construction and Attribution**:
   - The First Temple was **commissioned by biblical king Solomon** and is described in the Hebrew Bible.
   - Although no remains of the temple have been found, most scholars agree that it existed on the **Temple Mount in Jerusalem** during the Babylonian siege.
   - There is debate over the **date of its construction** and the **identity of its builder**[1].

2. **Purpose and Features**:
   - The First Temple served as a **religious building for worship** and also functioned as a **place of assembly for the Israelites**.
   - It was the **home for the Ark of the Covenant** in the Holy of Holies, a windowless inner sanctum within the structure.
   - Entry into the Holy of Holies was restricted, and only the **High Priest of Israel** could enter, usually on **Yom Kippur**[1].

3. **Destruction and Impact**:
  - The First Temple was **destroyed during the Siege of Jerusalem** by **Nebuchadnezzar II** of the Neo-Babylonian Empire in **587 BCE**.
  - This event fulfilled biblical prophecies and significantly influenced the transition from polytheism or monolatrism to **Jewish monotheism**[1].

4. **Historical Context**:
  - During the **First Temple period**, it was built around **1000 BCE** by **King Solomon** after King David conquered Jerusalem and made it his capital.
  - The scant remains of the temple can be found on the **south hill of the City of David**[2].

In summary, the First Temple played a crucial role in ancient Jerusalem's religious and cultural history, and its legacy continues to resonate today. 🏛 🌟.
1. **King Joash** (also known as Jehoash):
  - During his reign, around **835-795 BCE**, King Joash supervised extensive repairs to the Temple built by **King Solomon** in Jerusalem.
  - He installed the **first collection box** in the Temple, allowing worshippers to make offerings toward the cost of the repairs[4].

2. **King Zerubbabel**:
  - After the Babylonian exile, King Zerubbabel led the efforts to **rebuild the Temple**.
  - The project began around **536 BCE**, experienced a break of fourteen years, and then resumed in **520 BCE**, finally completing in **516 BCE**[3].

3. **King Solomon**:
  - Solomon, the son of King David, was credited with **building the original First Temple**.
  - The temple was constructed around **1000 BCE** and stood until its destruction by the **Babylonians** in **587 BCE**[1].

The **Second Temple**, also known as **Herod's Temple**, was a **reconstructed Temple** in Jerusalem that stood between approximately **516 BCE and 70 CE**. Here are the key details about its construction and builders:

1. **Origins and Modest Beginnings**:
  - The Second Temple was originally a relatively modest structure.
  - It was built by Jews who had returned from exile in Babylon under the authority of **Zerubbabel**, the grandson of **Jeconiah**, the penultimate king of Judah.
  - Construction began under the auspices of the **Persian King Cyrus the Great** and was completed during the reign of **Darius I**.
  - This period marked a time of renewed Jewish hope and religious revival[1][2].

2. **Refurbishment and Expansion**:
  - In the first century BCE, the Second Temple underwent significant changes under the reign of **Herod the Great**.
  - Herod refurbished and expanded the temple, resulting in a grand and imposing structure.
  - The Temple Mount, where the Second Temple stood, was also significantly expanded, becoming the **largest religious sanctuary** in the ancient world[1][3].

3. **Destruction**:
  - In **70 CE**, during the **First Jewish–Roman War**, the Second Temple was **destroyed by the Roman army** led by **Titus** during the **siege of Jerusalem**.
The Second Temple held immense significance for Jewish faith and identity, serving as the central place of worship, ritual sacrifice, and communal gathering for Jews during the Second Temple period. 🏛 🌟.

Al Aqsa

**Al-Aqsa**, also known as **al-Masjid al-Aqṣā**, is the compound of **Islamic religious buildings** that sit atop the **Temple Mount** (also called **Haram al-Sharif**) in the **Old City of Jerusalem**. It holds immense significance for Muslims and is considered the **third holiest site in Islam**[1].

Here's a historical overview of its construction:

1. **Early Origins**:
   - During the **7th century CE**, a small **prayer house** was erected on the Temple Mount during the rule of **Rashidun Caliph Umar** or **Umayyad Caliph Mu'awiya I**.
   - The present-day **Al-Aqsa Mosque** (also known as **Qibli Mosque** or **al-Jāmiʿ al-Aqṣā**) was originally built by the **fifth Umayyad caliph Abd al-Malik** or his successor **al-Walid I** (or both).
   - It was constructed as a **congregational mosque** on the same axis as the **Dome of the Rock**, a commemorative Islamic monument.

2. **Reconstruction and Expansion**:
   - After being **destroyed in an earthquake in 746 CE**, the mosque was rebuilt in **758 CE** by the **Abbasid caliph al-Mansur**.
   - Further expansion occurred in **780 CE** under the **Abbasid caliph al-Mahdi**, resulting in a structure with **fifteen aisles and a central dome**.
   - The mosque was again **destroyed during the 1033 Jordan Rift Valley earthquake**.
   - It was eventually rebuilt by the **Fatimid caliph al-Zahir** in the **11th century**, preserving the **original outline**.

3. **Periodic Renovations**:
   - Throughout history, various **Islamic dynasties** made additions to the mosque and its precincts, including the **dome**, **façade**, **minarets**, and **interior structure**.

4. **Historical Context**:
   - The mosque was **captured by the Crusaders in 1099** and used as a **palace**.
   - Later, it became the **headquarters of the religious order of the Knights Templar**.
   - After the area was **conquered by Saladin in 1187**, the structure's function as a mosque was **restored**[1].

In summary, Al-Aqsa Mosque is a symbol of faith, history, and architectural achievement, standing as a testament to centuries of devotion and cultural exchange. 🕌🌟.

# ஆனந்தக் கூத்து

---

ஆணும் பெண்ணுமாய், அன்பின் ஆனந்தக் குறியீடாய்,
ஆதிப்பெற்றோர் ஆதாம் ஏவாளை -தம் சாயலில்
அர்த்தநாரிஸ்வனன் படைத்து
பல்கிப் பெருகி, பூமியை ஆள வரம் கொடுத்தார்



யின்னும் யாங்குமாய், சிவ சக்தியாய், அமலர்களாய்,
ஏதேன் தோட்டத்தில் அன்றில் பறவைகளாய் கூடிக்
களித்தவர்களுக்கு, விலக்கப்பட்ட அறிவுக்கனி சோதனையானது.
தம் அகத்தே “வீட்டை” கண்டிட வாழ்வு போராட்டமானது.

கடவுளைப்போல் ஆக விரும்பிக் கட்டளையை மீறி-
கனியை உண்டவர்கள் நன்மை தீமை அறிந்தார்
அகநிர்வாணம் புரிந்திட-அத்தி இலையால்
தம்மை மறைத்து, வெட்கி நாணி ஓடி ஒளிந்தார்

ஆணவம் சாபமாய் படைப்பை வாட்டிட
ஏதேன் தோட்டத்தின் கதவுகள் மூடிட,
இருண்ட கானகமாய்ப் புதிய உலகம்
எட்டாத தொலைவிலோ நிர்க்குண பிரம்மம்.

இருமை கடந்து, அகங்காரம் அறிந்து கழித்து,
ஒருவரில் ஒருவர் அன்பினால் கரைந்து
அர்த்தநாரிஸ்வரராகி, இருப்போடு ஒன்றாகும்
சத்சித்தானாந்த நிலையே விடுதலை

தன்னையே படைப்பாக்கிய ***பரபிரம்மம்***
சகுண பிரம்மமாய் தன் மகனையே மீட்பாக்கி
ஆனந்தக் கூத்தாடிய பிரக்ஞான பிரம்மம்

உள்ளுணர்வின் உன்னதமே தெய்வீகம்
இழிநிலையோ எரி நரகம், நடுவே மனிதம்-
உயர்ந்தால் வாழ்வு, தாழ்ந்தால் நரகு
என்றுமுள்ள வாழும் தர்மத்தின் நியதி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-28-09-2023

# ஆண்டவன் கட்டளை

---

எம் மொழியில் எல்லாம் வல்ல இறைவன் யாவே
எழுதினார் பத்து கட்டளைகளை?
நாகரீத்தின் உச்சியில் எகிப்தியர் இருந்தபோதிலும்
கைரோகிளிபிக்(hieroglyphic) மொழிக்கும்
நாடோடி யூதர்களின் ஹீபுரு மொழிக்கும்
அரிச்சுவடிகள் இல்லை

சித்திர உருக்களால் எகிப்தியரின் எழுத்து வடிவம்-
வாய்மொழி மரபாய்-யூதர்களின் ஹீபிரு வடிவம்.
எழுத்து வடிவம் இல்லாக் காலத்தே- இறைவன்-
பத்து கட்டளைகளை எழுதினார் என்பது வியப்பே?

எழுதப் படிக்க தெரிந்த ஒரே கல்விமானாய்
எகிப்திய முன்னாள் இளவரசர் மோயீசன்,
'***இருப்பவர் நாமே*** எனும் இறை தரிசனத்தின் பின்
ஏகன் இறைவன்  என்று முழங்கி
அநேகன் இறைவன் என்ற எகிப்திய சமூகத்திற்கு
"என் மக்களைப் போகவிடு"சவால் விடுத்த மீட்பன்

இறைவனும், மனிதனும் இணைந்த இணையில்லாத
யூத விடுதலைப் போராட்டத்தில்-இஸ்ராயேலரை
விடுவித்து வழிநடத்தும் இறை பணியாளன்-இறைவனோடு
இணைந்து புதுப்பித்த எகிப்திய சட்டங்களாய்
இஸ்ராயேலரின் திருச்சட்டங்கள்.?

அறிவு ரீதியில் வரிவடிவம் இல்லாத மொழியில்
எழுதிட வாய்பில்லை -ஆனால் தாயும், மழலையும்
பேசிட தரணியில் எங்கும் மொழியில்லை

தாயும் மழலையும் உறவாடும் அழகு மொழி கடந்த
அன்பின் அதிசயம்! தாயன்பே மொழியாகும் பரகசியம்
இறையன்பின் அளப்பெரிய வெளிப்பாடு பத்துக் கட்டளைகள்

இருளில் தடுமாறி குழியில் வீழ்ந்து விடாமலிருக்க
வாழ்வுப் பாதைக்கு ஒளியாய், நாடு கொண்டு வாழ
வழியும், உண்மையும், வாழ்வுமானவரின்
அன்புக் கட்டளைகள்- திருந்சட்டமானது
வாய்மொழி மரபே மாறாத உண்மையானது



கட்டளைகளின் ஆழத்திலே இறையன்பு-
பிறரன்பு-தன்னை நேசிக்கும் அன்பு
இறைவனே நம் தந்தை
நாம் எல்லோரும் சகோதரர்
அன்பினாலே பிறந்த குடும்பம் நாம்
என்னும் ஆனந்தம்

வரிவடிவில்லாத மொழி தாண்டி
அன்பினால் இறைவன் வகுத்த திருச்சட்டம்
வாழ்வளிக்கும் இறை வாய்மொழி
கிறிஸ்துவின் முன் அடையாளம்

கல்லில் எழுதிய எழுத்தாய் கற்பலகையில் அவர்
கையெழுத்து, கல்லான மனங்களும் மனம் மாறிட
கல்மனங்களில் உறங்கிடும் மனச்சான்றை உசுப்பிடும்
கட்டளைகளாய் அவர் வாய்மொழி

இறைவன் மனித மனங்களில் எழுதிய சட்டம்
அவர் அன்புக் கட்டளைகள்-புரிந்தவர் வாழ்வடைந்தார்
புரியாதோர் ஆய்விலே களைப்படைந்தார்.

உன் கடவுளாகிய ஆண்டவரை உன் முழு அறிவோடும்,
உன் முழு இதயத்தோடும்,
உன் முழு ஆற்றலோடும் அன்பு செய்வாயாக

நம்பிக்கை கடந்த உண்மையைத் தரிசனமாக்கிட
விடுத்த அழைப்பு
**வாழ்ந்தறியும் சத்தியமே இறைவன்**
வாழ்வாக்கி வழிபட்டு அனுபூதியில் அறிந்திடு
மோஸேயின் கூற்று அற்புதத்திலும் அற்புதம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-05-2023

# அண்டமும் பிண்டமும்

---

அனலும் குன்றாத, ஒளியும் குறையாத-சூரிய
அக்கினி குண்டத்தை தொழுது பணிந்து சுற்றி வந்து ஆடும்
அழகு நங்கையராய் நவகிரகங்கள்.




ஒளியைத் தொழுது, ஆடிக்களித்து
இரவில் உறங்கி இளைப்பாறி
இருமை அறிவை கடந்து இவர்தம் வாழ்வு

எல்லாம் மாறும் என்று சொல்லிச் சுழன்று
நில்லாமல் சுற்றும் உலகு-எதுவும் நிலையற்றது என்றிட
தன்னை நாளும் புதுப்பிக்கும் அழகு

ஒளியாலே மலரும் வாழ்வு-இருளிலே உறங்கும் இரவு
இருளும் ஒளியுமாய், யிங், யாங்  நம் உலகு

சக்தியும் சடமும், சூனியத்தில் ஆடும்
ஆனந்த தாண்டவமாய்ப் படைப்பு,
சத்தியும் சடமும் ஒன்றில் ஒன்றாகிப், பலவாகிப்
படைப்பாகிப் பேரானந்ததில் நிலைப்பு

பிரபஞ்ச பிரக்ஞை, தன்னைப் பகிர்ந்திட
ஆறு நாட்களாய்த் தொடர்ந்த படைப்பில்
ஆறறிவுப் படைப்பாய் பரிணாமமாய் மனிதன்

எல்லாம் அறிந்த, எல்லாம் வல்ல,
எங்கும் நிறைந்த சத் சித் ஆனந்தக் கருணையால்
ஏழாம் நாளில் எல்லாம் நிறைவு
முழுமையில் தோன்றியது முழுமையாகிட
எல்லாம் புதுமையானது

நிர்க்குண பிரம்மம் சுத்த சைதன்யமாய் இன்புற்றிருக்க
பிரக்ஞானம் பிரம்மம் -அஹம் பிரம்மஸ்மி
தத் த்வம் அஸி என்றே  வார்த்தையாய் நின்று
(LOGOS) ஓங்காரமாய் அதிரும் சகுணப் பிரம்மம்.

ஆணவத் தளை அவிழ்த்து தன்னை அறிந்து
தன்னைச்சேர மனிதனை அழைக்க
மானுட வடிவெடுத்த இறை வார்த்தை

அறிவோ துன்பம்-அறியாத ஏழாம் அறிவோ
சூனியமாய், ஞானமாய், சுத்த சைதன்யமாய்
நிர்வாணப் பேரின்பமாய், மனமழிந்த தூய மனமாய்
கிருஷ்ண, புத்த -கிறிஸ்து மனமாய் காட்சி தந்து
எரியும் முட்செடியில் சக்தியும் சடமுமாய் ஒளிர்கின்றது.

**இருப்பது நாம்** என்ற மெய்யிருப்பு
இருமை கடந்து மனம் அழித்து சரணடைந்து
தூய உள்ளுணர்வாய் உயர்ந்திட
இன்றும் அழைக்கின்றது.

அறிவுக்கனியால் நன்மை தீமை அறிந்து
பிளவுண்ட ஆணவ ஆதாம் மனம்
வெட்கி, ஒளிந்து, அத்தி இலை ஆடை உடுத்தி
குற்ற உணர்வோடு துக்கித்து
ஏதேன் தோட்டம் நின்று வெளியேறியது

சிலுவையில் தன்னை மறுத்து எல்லாம் நீயே
தந்தையே உம் சித்தமே என் சித்தம் எனச்
பரிபூரண சரணடைந்த தூய இயேசு மனம்
கிறிஸ்து பிரக்ஞ்சையாய் மலர்ந்து மாட்சியுடன்
“ துன்ப வெளியில் நின்று” –“ இன்பவனம்” சென்று
முழுமையில் முழுமையானது
அறிவு தந்த ஆணவம் வீழ்ச்சியானது
அடக்கம் தந்த ஞானமோ-மீட்பானது.

உள்ளுணர்வில் உயர்ந்து இறை மக்களாய் மாறிடத்
தன்னைத் தாழ்த்தி, வையகம் வந்து வாழ்ந்து காட்டியது
வழியும், உண்மையும் வாழ்வுமான இறைவார்த்தை.

***உள்ளுணர்வின் அதி உன்னத நிலையே இறைவன்***
***ஆணவ மனமே கானகம்-தூய மனமோ இன்ப வனம்***
*Freedom from the mind is Peace*
தன்னை அறிந்து-மனம் துறந்த சரணாகதியே மெய்வாழ்வு
மெய்யறிவே நிர்வாணம்-மீட்பு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-29-04-2023

# ஆனந்த நடனம்

---

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு
ஆணவமழித்து , தூய மனமாய்ப் பிறந்தவர்க்கு
இனியொரு பிறப்பில்லை-எரிநரகத் தீர்ப்பில்லை

இறையரசு மலர்ந்த இதயமே-இதோ நான் உம் அடிமை
இறைவார்த்தையின்படி ஆகட்டும் என்று
ஆனந்தக் கூத்தாடிக் கொண்டாடும்
அன்பைச் சிவமாக்கி- வாழ்வைத் தவமாக்கும்

கருணை மனம் இருப்பதை-இல்லாத ஏழையரோடு
பகிர்ந்து இன்புறும், பொங்கும் ஆனந்தம்
நெஞ்சை நிறைக்க, ஆண்டவன் குழந்தை நாம் என்றே
ஆடிப்பாடி வாழ்வைக் கொண்டாடும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-28-09-2023

# அப்பா தந்தாய்

---

நினைவறிந்த நாள் முதல் தந்தையில்லாப் பிள்ளை நான்
“அப்பா” என்றழைத்தது இறைவா உன்னைத்தான்.
நட்பும், உடன் பிறப்புகளும் என்னைப் பிரிந்தபோதும்,
பூவாய் மலர்ந்த காதல் வாடி உதிர்ந்தபோதும்,
அழுது, ஆறுதல் வேண்டியதும் உன்னிடம்தான்

ஆனந்த உறவாய், அன்புருவாய் உயிரில் கலந்த
அன்னையும்-என்னை விட்டுப் பிரிந்தபோது-
அநாதை நான், அம்மையப்பனாய் உன்னையே
தொழுது, உம் சித்தமே என் சித்தம் என்றேன்

என் தந்தையே! என் இறைவா-உன் மகனை
ஒரு போதும் மறவாதே, மாதா, பிதா, குருவாய்,
நட்பாய், தந்தையே, நான் மறந்தாலும்
என்னை அன்பு செய்ய மறவாதே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14-04-2023

# இனம் பாதி மதம் பாதி கலந்து செய்த மது

எளிய மனத்தவருக்கே இறையரசு, தூய மனத்தவருக்கே
சத்திய தரிசனம் கனவாக, இனம் தேர்ந்து மதம் கொடுத்த
இறைவன் களைத்திட்டார், ''மதவெறி பிடித்த மனிதன்'',
கொலை வெறியோடு அலையக் கண்டு மனம் வருந்திட்டார்.





''இருப்பவர் நாமே'' என மொழிந்தவர்
யூதரைத் தெரிந்து ''தோரா'' கொடுத்து யெகோவா ஆனார்
இயேசு வழியாக அன்பின் வேதம் கொடுத்து
கிறிஸ்தவர்களைத் தெரிந்து இறை தந்தையானர்

இஸ்மாயிலருக்கு -'' வல்ல அல்லா''வாகி
முகம்மது நபி வழியே-''அல் குரானை'' வழங்கி
சகோதரத்துவத்தால் இன்புற்றார்

இனங்களை மாற்றி, மதங்களை கொடுத்து, தம் பெயரையும்
மாற்றிடும் இறைவனால். உலகில் தீராத மதப்பூசல்கள்.
''வேதங்களால்'' உலகெங்கும் நாளும்-விதாண்டா வாதம்
மானுடத்தைப் பிரிக்கும் இரும்புத் திரையாய் மதவாதம்

மனுஸ்மிருதியின் சாதிய சாம்ராஜ்யத்தில் பார்ப்பனியத்தின் ஆட்சி
அகிம்சை, பகுத்தறிவு பௌத்தம்- சமணத்தின் அகப்புரட்சி
அன்பே தெய்வம் இயேசுவின் அகக்கிளர்ச்சி-அனுபூதியில்
வாழ்ந்தறியும் உண்மையே தெய்வம் வேண்டாத புரட்சி?




இனி ஒரு நபியில்லை இறுதி நபி-முகம்மதே
இஸ்லாமியர் உரைக்க-இறைவனும் இடிந்து நின்றார்
இனம் தெரிந்து மதம் கொடுத்த- ***பரப்பிரம்மம்***
யதார்தவாதிகளை, நாஸ்தீகரைத் தேடி அலைகின்றார்.

வாங்கொலியும், கோயில் மணி ஓசைகளும் காதைப் பிளக்க
பிரித் ஒலிகளும் நாமாவளிகளும் ஊரை அதிர வைக்க
பிறை, சிலுவை, நட்சத்திரம் , தர்மச் சக்கரம் ஒளிர்ந்திட
அன்பு, உண்மை, கருணை மறந்து, உருவழியும் மதங்கள்

சாதிய யாகத்தில் -ஆகுதியாய் தலித்துக்கள்-
சிலுவைகளில் இயேசுவாய் சிறுபான்மையினர்
சாதியத்துக்கு சாமரம்-இனவெறிக்கு ஆசிர்வாதம்
சாவான பாவம்-உலகோ எரிநரகம்

கம்யூனிஸம் காலாவதியாகி-இனம் பாதி
மதம் பாதி கலந்து செய்த மதுவும் “அபினியாய்”
மதப்போதையை ஏற்றிட கலங்கிடும் இறைவன்.




அழுகைச் சுவரும்- அல் அக்ஸா பள்ளியும் மோதிட
வாக்களிக்கப் பட்ட பூமியிலே வற்றாத இரத்தம்
ஷலோம்-சலாம் அலேக்கும் -வெற்று வாழ்த்தாகிட
நாளும் தொடரும் யுத்தம்

பல்லாயிரம் பிரிவாய் கிறிஸ்தவம்-இன்றும் இயேசுவைச்
சிலுவையில் அறைந்திடும் நிதரிசனம், ஷியா -சுன்னி சிந்திடும்
இரத்தம் அச்சுறுத்திட, இனம் தெரிந்து மதம் கொடுத்த
இறைவன், மதங்களைக் கைவிட்ட ஆதங்கம்?

இனமதப் பூசல்களால் இடிந்த கோயில்களும் , தூர்ந்த விகாரைகளும்,
எரிந்த மசூதிகளும் அச்சமூட்ட, என்றோ மறைந்து, சிலைகளாய் நின்று,
கதைகள் சொல்லும்-மொஹஞ்சதாரோ -ஹரப்பா, எகிப்து-கிரேக்க-
ரோம-இன்கா-மாயாத் தெய்வங்கள் வியப்பில் ஆழ்த்த
ஆணவ மனம் கடந்து சூனியத்தில் நிலைத்த இறைவன்
கதையா? கற்பனையா? வெற்று நம்பிக்கையா?



இனம் பாதி- மதம் பாதி கலந்த மதக்கலவையோ?
இல்லை மதப்போதை தரும் மதுக்கலவையோ-கடவுள்?
அன்பின் அமுதோ? பகைமையின் ஆலகால நஞ்சோ?
இறவைா நீ, மானுடா, கடவுளை கண்டாள் கேள் ?

“கடவுள் இறந்துவிட்டார்” பிரட்ரிக் நீட்ஸேயின் பிரகடனம்
மதம் கடந்த ஆன்மீகவாதியைத் தேடிடும் இறைவன்
தூய மனங்களில் தரிசனமாகும் அன்பன்

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும் பூவுலகில்
நல் மனத்தவருக்கு அமைதியும் வானவர் நற்செய்தி
உள்ளுணர்வின் அதி உன்னதமே இறைவன், நல் மனமே
பெருங்கோயில் அனுபூதியில் அறிந்தவருக்கே ஆனந்தம்

உண்மை தவமாக, அன்பு சிவமாக, வாழ்தலே,
மெய்யான இறை வழிபாடு-மற்றெல்லாம்
மதப்போலிகளின் கூத்து, வெற்றுக் கூப்பாடு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க, எல்லோரும் நலம் வாழ்க***
*Pax Ravichandra-29-09-2023*

# இயற்கையே இறைவன்



வானில் மெல்லத் தவழ்ந்து செல்லும்-
வெண்மேகங்களைப் பார்த்து
என்ன பறவைகள் இவை-வியந்த
வண்ணப் பறவைகள்

பறந்து செல்லும் பறவைகளைப் பார்த்து
என்ன மேகங்கங்கள் இவை வியந்த மேகங்கள்
வானில் உலாவியும் அருகருகே வராத தூரம்
வாழ்க்கை அளித்த வரப்பிரசாதம்

ஊர்ந்து வரும் நதிகளை உவப்போடு அணைத்திட
அலைக் கரங்களை விரித்து ஆர்ப்பரிக்கும் கடல்
தன்னையே அளித்து நதி கடலாகும் கூடல்

மண்ணில் புதைந்த விதைக்கு கருவறையாகும்
மண்ணும் தாய், ஒளியைத் தேடி முளைத்திடும்
நாற்றைத் தாங்கிடும் மண்ணும் தாய்

காலம் தப்பாது மாறி வரும் பருவங்கள்
அள்ளிப் பொழிந்து மண்ணை வளமூட்டும்
வள்ளலாய் மழை, தன்னை எரித்து ஒளி தரும்
தியாகச் சுடராய் கதிரவன்

ஒளியையும், வெப்பத்தையும் நெருப்புக்குள் வைத்தான்
பனியையும், ஆவியையும் கூடவே நீருக்கு அளித்தான்
சூனியமாய் விண்ணையும், சுதந்திரமாய் உலவிடக்
காற்றையும், தாய் மடியாய் பூமியையும் தந்த இறைவன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-09-2023

# ஞானம்

---

மூப்பு, பிணி, சாவு உறவாடும் வீடு
உயிர்க் குருவி வாழும் மண் கூடு
கூடு உடைந்து குருவி பறந்திட
மண்ணோடு மண்ணாகும் வாழ்வின் அழகு

உண்டு குடித்து, உறவாடிக் கலவி செய்து
உறவு வளர்த்து. செல்வம் சேர்த்த வாழ்வில்
ஞானச் செல்வம் ஏதுமில்லை
பிறப்பறுக்க வாழும் கலை நுட்பம் புரியவில்லை

கர்மவினை தீர்க்க-உயிரும்,
கருப்பை குழிக்குள் மீள விழுந்து
பிறப்பெடுக்கும் வாழ்வு எதற்கு
சொல்லடி- ஞானப்பெண்ணே?

பொன்னும், புகழும், பதவியும் பொய்யாய்ப் போயிட
சுற்றமும், சூழலும் காடு வரும் உறவாகிட
சிவம் பிரிந்தபின் சவமானவனுக்கு
சித்தமழிந்தபின் மற்றோர் பிறப்பெதற்கு?
சொல்லடி- ஞானப்பெண்ணே?

# வெற்றுப்படகு

---------+++++++++++++++++++++++++++++++-------

வெற்றுப் படகாய் பயணம் செய்தேன்-வேதனையில்லை
என்னை முட்டியவர்களும்-நான் மோதியவர்களும்
சற்றும் புண்படவில்லை, பேரலைகளும், பெருங்காற்றும்
என்னைக் கவிழ்க்க முனைந்து தோற்றன
என்னை அமிழ்த்திட முயன்று களைத்தன

வெற்றுப்படகாய் பயணம் செய்தே
வெறுமைக் கரை சேர்ந்தேன், என்னே இன்பம்
**மனம் கழித்தால் மாபெரும் இன்பம்**
**சத்தியம், சிவம், சுந்தரம் நம் நிரந்தரம்**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-29-09-2023*

# குருத்துவம்

---

விரி குழல் ஆட, நீண்ட வெண்அங்கி மெய் மூட,
மார்பில் சிலுவையும், கரங்களில் விவிலியமும் அடையாளம்,
இறையியலும், தத்துவமும் ஓதிடும் பாடம்
ஆயன் செய்த அலங்கார அபிஷேகம் “குருத்துவம்”

அலையும் மனமோ மதம்பிடித்த வேழம்
மதம் கடந்த ஆன்மீகம் அறியப்படாத அனுபவம்
மெய்யின் உணர்ச்சிகளோடு போராடும் வாழ்வு
கற்பு, கீழ்படிதல், ஏழ்மை வார்த்தையான வாய்ப்பாடு

அறியாப் பருவத்தில் தொடங்கிய பயணம், அடையும் இலக்கோ
-விழிப்புணர்வு., ஆன்மீகம் உள்ளார்ந்த தனி மனிதப் பயணம்?
“குரு தத்துவம்” அறியாத பேதையராய் வெண்ணங்கி மானுடம்

உண்மையா அது என்ன? இன்றும் இயேசுவின் மௌனம்
புரிந்து கொள்ளப்படாத தத்துவம், ஓதும் வேதத்தை
அனுபூதியில் அறியாத ஜடம்
உண்மையை எச்சிலாக்கும் மடத்துவம்

ஆணவம் கழித்த தூய மனதிற்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு
காவி தரித்த மேனியெல்லாம் குருவல்ல
கிளிப்பிள்ளைகளாய் ஓதுவதும் வேதமல்ல

கட உள்ளே- கடவுளாகு, ஆணவ
மனம் அழிந்த உயர் நிலையே ஞானம்
அதுவே இறையரசு-பிரக்ஞானம் பிரம்மம்.
அஹம் பிரம்ம அஸ்மி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-29-09-2023*

# ISA IBN MARIYAM
# மரியம் மகன் இயேசு

---



அளவற்ற அருளாளனை, நிகரற்ற அன்புடையோனை
வல்ல அல்லாவை வணங்கிப் போற்றுகிறேன்-
உம்மைச் சரணடைந்தேன் இறைவா
உம் அரசு வருக-உம் சித்தம் நிறைவேறுக
அரசும், வல்லமையும், மாட்சியும்
என்றென்றும் உமதே-ஆமேன்




ஆபிரகாமின் வழித்தோன்றல்களுக்கு
மோயீசன் வழியாய்த் "***தோராவையும்***",
இயேசு வழியாய் "***இஞ்சீல் வேதத்தையும்***"
முகம்ம்மது நபி வழியாய் -இஸ்மாவேலருக்கு
"***அல்குரானையும்***" அருளிய
அளவற்ற அருளாளனே-நிகரற்ற அன்புடையோனே
எல்லா புகழும் உமக்கே
******



Jesus in the Quran
- Born of the Virgin Mary (21:91)
- The Word of God and a Spirit from Him (4:171)
- Spoke from the cradle (19:29-30)
- Preached the Gospel (3:48)
- Supported by the Holy Spirit (2:87)
- Followed by disciples (5:111)
- Cured the blind and the leper (3:49)
- Gave life to the dead (3:49)
- Raised to God alive (4:158)
- Similar in creation to Adam (3:59)
- A prophet like Abraham and Moses (2:136)
- Preached: "Worship God, my Lord and your Lord" (5:117)

புள்ளினம் கூவிக் களித்து இசைக்கோலம் போட
பூவினம் பூத்து குலங்கி மலர்க்கோலமிட –பூமியெங்கும்
வசந்தகாலத்தின் வண்ணக்கோலங்கள்

"கீச்" "கீச்"  என குஞ்சுகளின் பிஞ்சுக் குரல் தாயை அழைக்க
பறந்து வந்த தாய்க் குருவி பசியால் வாடும் குஞ்சுகளுக்குப்
பறந்து, பறந்து பரிவோடு உணவளிக்கும் காட்சி
தாய்மையுறாத ஹன்னாள் நெஞ்சைத் தொட
வயதான காலத்தே வல்ல இறைவனிடம்
குழந்தைச் செல்வமாய் வேண்டிப் பெற்ற வரம் **மரியம்.**

Behold! Allah said: "O Jesus! ...
- 3:55 Behold! Allah said: "O Jesus! I will take you and raise you to Myself and clear you of the falsehoods of those who blaspheme; I will make those who follow you superior to those who reject faith, to the Day of Resurrection: Then shall you all return unto Me, and I will judge between you of the matters wherein you dispute."
- 3:59 The similitude of Jesus before Allah is as that of Adam; He created him from dust, then said to him: "Be". And he was.

வல்ல அல்லா ஈந்த வரத்தை,-அன்னையும்-
நல்லிறைவனுக்கே -கோயில் காணிக்கையாக்கிட-
சக்கராயவின் கண்காணிப்பிலே
வண்ணமும, வாசமும் மிளிர வளர்ந்த குழந்தை

Jesus in the Qur'an (2)
"And mention] when the angels said, "O Mary, indeed Allah gives you good tidings of a word from Him, whose name will be the Messiah, Jesus, the son of Mary - distinguished in this world and the Hereafter and among those brought near [to Allah]. He will speak to the people in the cradle and in maturity and will be of the righteous."
(Th Noble Quran 3:45-46)

வல்ல அல்லாவும் சிறுமியை போஷித்துப் பராமரித்து
புனிதவதிகளின் அரசி மரியம்
என்றே மகிமைப்படுத்திட
மாதர் குல மாணிக்கமாய் -அல்குரானில்
எழுபது முறை பெயர் சொல்லி போற்றப்பட்டவளாய்
19ஆம் சூறா மரியம் என்றே அழைக்கப் பேறுடையவராய்
அல்லாவின் பேரன்புக்குரியவளாய் அன்னை மரியம்

***ஓ மரியம்! இறைவன் உம்மைத் தேர்ந்தார்***
***தூய்மைபடுத்தி மகிழ்ந்தார்–படைக்கப்பட்ட***
***எல்லாப் பெண்களிலும் மேலாய்***
***உம்மை உயர்த்திப் போற்றுகின்றார்.***

She gave birth to Jesus despite being a virgin.
She said, "How can I have a boy while no man has touched me and I have not been unchaste?" He said, "Thus [it will be]; your Lord says, 'It is easy for Me…"

Quran 19:20-21

இதோ இறைவனின் அடிமையென்றே
அன்னை மரியம் வாழ்ந்தார்
எம் சித்தமன்று உம் சித்தமன்றே
"***உத்தமி இஸ்லாமியராய்த்***" திகழ்ந்தார்



***அல்லா தன் ஆவியை ஊதிடத்*** தாய்மையடைந்த
கன்னி மரியம், ***மனிதர்களுக்கு***
***அருளடையாளமாகவும் அத்தாட்சியாகவும்***
***வல்ல அல்லாவின் வாக்காய் இருந்து***
அளவற்ற ஞானத்தால் பிரகாசித்த குழந்தை
இயேசுவை பெற்றெடுத்த தாயும் தெய்வம்

She was chosen by Allah above all women.
When the angels said, "O Mary, indeed Allah has chosen you and purified you and chosen you above the women of the worlds.

Quran 3:42

***மரியம் மகன் இயேசு***
அல்குரானில் நேரடியாகவும், மறைமுகமாகவும்
நூற்றி எட்டுத் தடவைகள்
போற்றி பெருமைப்படுத்தப்படுகின்றார்.




Jesus is the most mentioned person in the Quran by reference; **25 times** by the name Isa, third-person **48 times**, first-person **35 times**, and the rest as titles and attributes.

"இறை வாக்கினால்" எல்லாம் படைக்கப்பட
" வல்ல இறை ஆவியோ"
படைப்பனைத்தையும் வழி நடத்திட
இறைவனோடு இறை அம்சமாய் இருந்த
"இறைவாக்கும்" "இறை ஆவியுமாய்"
இயேசு –மெஸியா

She was falsely accused of infidelity.
She brought him (Jesus) to her people, carrying him. They said, "O Mary, you have certainly done a thing unprecedented. O sister of Aaron, your father was not a man of evil, nor was your mother unchaste."

Quran 19:27-28

ஆண்மகன் உறவின்றித் தூய கன்னியிடம்
அல்லாவின் ஆவியே மகனாய் அவதரித்தது
சத்தியத்தின் வாக்கே-மானுடர்க்கு
நித்திய வாழ்வளித்திட உலகிற்கு வந்தது

மாதாவின் திருப்புகழை மழலையும் வாய்திறந்து கூறி
மரியம் மேல் கொண்ட மானுட ஐயத்தைப் போக்கியது
மழலையும் பேசுமோ என்றவர் ஐயமும் நீங்கிட,
மரியத்தின் பெருமையும் ஓங்கியது

இறை அடிமை நாம்
எல்லாப் புகழும் வல்ல இறைவனுக்கே என
மழலையும் இறைபுகழ் பாடியது.

According to Vedic cosmology, 108 is the basis of creation, represents the universe and all our existence. In Hinduism, we believe that outer cosmology should mirror our inner spirituality because our ultimate realization is that we are one in the same

**An entire Chapter is named after her in the Quran.**

Her name is the centre-point of the 19th Chapter of the Quran, 'Surat Maryam'.

In fact, Mary is the only woman referred by her first name in the Quran. This is an honourable status granted by the Quran only to few, mostly to the Prophets, Messengers and Angels.

She experienced many miracles.

Every time Zechariah entered upon her in the prayer chamber, he found with her provision. He said, "O Mary, from where is this [coming] to you?" She said, "It is from Allah . Indeed, Allah provides for whom He wills without account."
Quran 3:37

In the interpretation of this verse, scholars say that every time Zachariah would visit her, he would miraculously find her with the fruits of summer during winter and the fruits of winter during summer.

She was incredibly chaste, pious and modest.

And Mary, the daughter of 'Imran, who guarded her chastity… she believed in the words of her Lord and His scriptures and was of the devoutly obedient.

Quran 66:12

மண்ணால் குருவிகள் செய்து மரியம் மகன்
தம் ஆவியை ஊதிட, குருவிகள் எழுந்து
விண்ணில் பறந்திட, உயிரளிக்கும் ஆவியாய் அவர்

இறை வாக்கோ ஞானமாய் ஒளிர்ந்திட
இறை வல்லமையோ இறந்தோரை எழுப்பி
வல்ல புதுமைகள் பல புரிந்திட
இறைமகனாய் அவர்

தம்மை வதைத்தவரையும் மன்னிக்க வேண்டி
அளவற்ற அருளாளனாய்,
நிகரற்ற அன்புடையோனாய் -கழுமரத்தில்
துன்புறும் மெஸியாவாய் அவர்

மண்ணால் ஆணவரெல்லாம் மண்ணக்கே
திரும்பிட-விண்ணின்று வந்த-இறை ஆவியும்,
இறைவாக்குமாய் ஒளிர்ந்தவரோ
விண்ணக்கே திரும்பியது மகிமையே

ஆடிடத் தொட்டிலின்றி-ஈச்சை
மரத்தடியில் இறை ஆவியால் பிறந்தார்
நாடோடிப் போதனாய் தலைசாய்க இடமின்றி
நாடெங்கும் அலைந்து நற்போதனை செய்தார்.

தமக்கென்று ஒரு தாரமும் கொள்ளாமல்
தாயோடு இறைபணி புரிந்தார்
இரத்தமும் சிந்தாமல், யுத்தமும் புரியமல்
தம் இரத்தத்தை  மானுட மீட்பிற்காய்ச் சிந்தினார்.

அன்பே கடவுள் என்றவர்
"எதிரியையும் அன்பு செய்" என்ற போதனையையும்
சிலுவையில் வாழ்ந்து காட்டினார்

சூபிகளும், மரியம் மகன் இயேசு வழி நின்றே-
இல்வாழ்வை துறந்து இறைவனைத்
தொழுது வாழ்கின்றார்

பணிந்து சாஷ்டாங்கமாய் தலையும், கைகளும்,
முழங்கால்களும் உடலும் தரையைத் தொட
தொழத்தக்கவரை முதலில் தொழுதவர்-மரியம்.
இன்றும் அவர் முறையில்-இஸ்லாமியர்
இறைவனை தொழுது மகிழ்கின்றார்.

Christ Jesus the son of Mary was (no more than) a messenger of Allah

- **4:171** O People of the Book! Commit no excesses in your religion: Nor say of Allah aught but the truth. Christ Jesus the son of Mary was no more than a messenger of Allah, and His Word, which Allah bestowed on Mary, and a spirit proceeding from Him: so believe in Allah and His messengers. Say not "Trinity": desist: it will be better for you: for Allah is One Deity: Glory be to Him: far exalted is He above having a son. To Him belong all things in the heavens and on earth.

يَا أَهْلَ الْكِتَابِ لَا تَغْلُوا فِي دِينِكُمْ وَلَا تَقُولُوا عَلَى اللَّهِ إِلَّا الْحَقَّ ۚ إِنَّمَا الْمَسِيحُ عِيسَى ابْنُ مَرْيَمَ رَسُولُ اللَّهِ وَكَلِمَتُهُ أَلْقَاهَا إِلَىٰ مَرْيَمَ وَرُوحٌ مِنْهُ ۖ فَآمِنُوا بِاللَّهِ وَرُسُلِهِ ۖ وَلَا تَقُولُوا ثَلَاثَةٌ ۚ انْتَهُوا خَيْرًا لَكُمْ ۚ إِنَّمَا اللَّهُ إِلَٰهٌ وَاحِدٌ ۖ سُبْحَانَهُ أَنْ يَكُونَ لَهُ وَلَدٌ ۘ لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ ۗ وَكَفَىٰ بِاللَّهِ وَكِيلًا

"But when she delivered her, she said, "My Lord, I have delivered a female." And Allah was most knowing of what she delivered, "And the male is not like the female. And I have named her Mary, and I seek refuge for her in You and [for] her descendants from Satan, the expelled [from the mercy of Allah ]."
(Quran 3:36)

al-Imran 3:45

- "(And remember) when the angels said: 'O Mary! Lo! Allah giveth thee glad tidings of a word from him, whose name is the Messiah, Jesus, son of Mary, illustrious in the world and the Hereafter, and one of those brought near (unto Allah)'"

எல்லாத் தலைமுறையும் அவரைப் பேறுடையாள் என போற்றிட
இறை அடிமை தான் என்றே இறை கருணை பெரிதென்றே
அளவற்ற அருளாளனை, நிகரற்ற அன்புடையோனை-அன்னையும்
வணங்கி வாழ்த்தி வாழ்நாளெல்லாம் தொழுது மகிழ்ந்தாள்-
இறப்பிலும் இறைவன் அவரை உயர்த்தியே மகிழ்ந்தார்.










இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
எல்லாப் புகழும் இறைவனுக்கே
Pax Ravichandra-15-05-2023

Professor and scholar Mahmoud M. Ayoub sums up what the Quran states despite interpretative arguments:

"The Quran, as we have already argued, does not deny the death of Christ. Rather, it challenges human beings who in their folly have deluded themselves into believing that they would vanquish the divine Word, Jesus Christ the Messenger of God. The death of Jesus is asserted several times and in various contexts." (3:55; 5:117; 19:33.)[212]

The Quranic verse in question which has been interpreted in various ways:

"And they said we have killed the Messiah Isa son of Maryam, the Messenger of God. They did not kill him, nor did they crucify him, though it was made to appear like that to them; those that disagreed about him are full of doubt, with no knowledge to follow, only supposition: they certainly did not kill him. On the contrary, God raised him unto himself. God is almighty and wise."

— *Quran surah 4 (An-Nisa النساء) ayah 157-158*[213]

Contrary to Christian teachings, some Islamic traditions teach that Jesus ascended to Heaven without being put on the cross, but that God transformed another person to appear exactly like him and to be then crucified instead of him. This thought is supported in misreading an account by Irenaeus, the 2nd-century Alexandrian Gnostic Basilides when refuting a heresy denying the death.[214]

## கஜுராகு

------------------------

காமம் கடந்த பின்-மோகம் மறைந்திட
செவ்வாயிதழ் முத்தங்களும் வெறும் எச்சில்களே
மோகத் தீ மூட்டிடும் தேகங்களின் சேர்க்கையும்
சக்கிமுக்கி கற்களின் உரசல்களே.

மோகத்தை விட்டு காமத்தைக் கடந்து
விழிப்புணர்வில் நிலைத்து
கஜீராகு கோயிலின் கர்ப்பகிரகத்துள் நுழைந்தேன்-
பேரானந்த பெருவெளியில் ஓரானந்தமாய்
கரைந்து  கலந்தேன் என்னே ஆனந்தம்

## நன்றி

------------------

விழியினிலோ -இருளின் ஒளி
செல்லும் வழியோ குண்டும் குழி
இரந்து வாழும் வாழவோ இழிந்த வழி
இருந்தும்-நெஞ்சினிலோ உன் நம்பிக்கை ஒளி
இறைவா உந்தன் படைப்போ
நாளும் உனக்கு செலுத்தும் நன்றிப்பலி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-29-09-2023

# காம வேதம்

---

நீஷ மொழி தமிழ் என இகழ, தேவ மொழி
சமஸ்கிருதம் எனப் புகழ பெருமான் புத்தர் ஒதுக்கிய
சனாதன தருமம் இதுதானா?-நெஞ்சம் நெய் வளர்த்த
தீயில் விழுந்த புழுவாக மனம் நொந்தேன்



ஆரிய தெய்வங்களும், தேவர்களும் புராணங்களில்
பெண்மையைச் சீரழிக்கும் அடங்காக் காமவெறியராக
மனுஸ்மிருதியின் சாதியம் தீண்டாமைத் தீய்க்கு நெய்யூற்றித்
திராவிடரை அரக்கராய்ச் சித்தரிக்க மனம் நொந்தேன்

வானையும், வையகத்தையும், ஈரடிக்குள் அடக்கிய
வாமன திருமாலும் சிவனடி காணாத காத்தல் கடவுளாக
முடி கண்டேன் என பொய்யுரைத்த பிரம்மனும்
படைத்தல் கடவுளானது வேடிக்கை

பெண்ணடிமைத்தனத்தை நிலைநிறுத்த புனைந்த பொய்
கதைகள்தான் எத்தனை? கற்புக்கரசிகள் என
விரல்விட்டு எண்ணிட, காப்பியங்கள் புனைந்ததும்
பெண்ணை புணர்வதும் புராணக்கதை.

மாற்றான் மனைவியை, குரு பத்தினியை புணர்ந்தவனும்
தேவர்களாக, ஊர்வசியை மோகித்து கசிந்த விந்தை கடத்திலிட்டு,
அகத்தியரை பிரம்மனும் பெற்றான் புராணமாக, காமம்
வெல்லமுடியாத. அடக்கியாள முடியாத உணர்ச்சியானது.

காமம், புராணம் கடந்த-மானுடத்தின் உணர்வு
படைப்பின் சூட்சும சூத்திரமான நிகழ்வு

பெண்ணே பேரின்பம் எனக் கண்டு காமத்தீயால்
வெந்த ஆணாதிக்கம் புனைந்த கதை கற்பு
பால்ய விவாகமும், கல்வித் தடையும்
பெண்ணியத்திற்கு பூட்டிய அடிமை விலங்கு

பால்ய விதவைகளுக்கு வெண்ணாடையும், மொட்டையும்
விலங்கானது, அழகைச் சிதைத்து மூலையில் இருத்தி
உணர்வுகளை பொசுக்கியதும், காமத்தின்மேல்
ஆணினம் கொண்ட அச்சத்தின் உச்சமானது

பதினையாயிரம் மனைவியர் கொண்ட கண்ணன் அவதாரமாக,
அரியும், அரனும் கூடிட பிறந்த ஹரிகரனும் தெய்வமாக
சிவனின் கசிந்த விந்தில் பிறந்த கார்திகேயனும் தெய்வமாக
முனி சிரேஷ்டர்களின் தவம் கலைக்க அப்சரஸீகள்

அடக்கிய முனிவன் மனங்களை அரித்திடும்
அடங்காக் காமத்தை அறிந்த மனோதத்துவ
மருத்துவனாய் இந்திரன்

ஆணினத்தின் ஆண் குறி, யோனிமேல் சயனித்த
சம்போகம் மஹாதேவனுக்கு அடையாளமானதும்
அதிசயிக்கத்தக்க அடையாளமே, யோகவடிவமே

பேரழகி அகலிகை கண்ட கனவும் பொய்யாக
கௌதம முனிக்கு கன்னிகா தானமாக
அழகை இரசிக்க தெரியாத அசடன்-காதலால்
கன்னியின் காமத் தீ அணைக்கத் தெரியாத மூடன்

அழகில் மயங்கிய-இந்திரன், அகலிகையை சுவைத்திட-
ஆறறிவு கடந்த, எட்டாம் சுவையை அணங்கும் ருசித்திட
அறிந்த முனியும் அகலிகையை கல்லாய் சபித்திட
**ஸ்ரீராமன்** கால்பட உயிர்த்த கதை-வேடிக்கை

ஆணினத்தின் கொடுமையால் கல்லாய்போன
பெண் மனது மீண்டும் கனிந்த கதையே -விடியல்
அறியாத முனிக்கு கல்லாய் சபிக்கும் வரம்
ஆணாதிக்கத்தின் கட்டுக்கதையே?

அழகிய கந்தருவ புருஷனை கண்நோக்கி மனதால்
கற்பிழந்தாள் தாரம் ரேனுகா என்றே தந்தை ஜமத்கனி
சொற்படி தமையனும் தாய் தம்பிகளின் தலையறுத்த கதை
ஆறாம் அவதார பரசுராம புருஷனின் கதை

காமத்தால் வெந்த முனி , ரோகத்தால் வாடிய மௌத்தகல்யரிஷி
ஆசைகொண்டு -வேசியை நாடிட-கூடையில் சுமந்து
குஷ்டனின் ஆசையை வேசியிடம் பத்தினியும் பதி பக்தியால்
தீர்த்துவைக்க-வாழ்த்திய கணவனிடம் பத்தினி கேட்ட வரம்

வரமாய் ஐந்துருவாயிருந்து-இம்மை மறுமைகளில்
காமசுகமளிக்க கேட்டவளை, முனியும் மனித யோனிபட்டு
ஐவரை மணந்திடச் சாபம் இட்டான், பாஞ்சாலியின் கதை
பஞ்ச பாண்டவரை மணந்ததும் மனதிற்கு ஆதங்கமே

பிள்ளை வரம் கேட்ட பக்தனுக்கு அழகிய மனைவி
நிர்வாணியாய் அன்னம் அளிக்க சிவனார் வேண்டிட
அன்னம் பகிர்ந்த அன்னத்தின் அழகைக் கண்டு
அமர்ந்த பலகையில் காமத்தால் கசிந்த சிவனார் விந்து

அணங்கும், மீதி அமுதை பலகையில் அமர்ந்து உண்ண,
கருத்தரிப்பின் விஞ்ஞான உண்மை, அழகிய கற்பனை

அத்வைத ஆதி சங்கரரும்-ஆவியிழந்த மன்னன்
உடலில் புகுந்து மகாராணியை புணர்ந்து
காமக்கலை அறிந்ததும் துவைத அழகே?

பெண்ணடிமைத்தனத்தின் உச்சமாய் அண்ணக தசரதனுக்கு
பத்தாயிரம் மனைவியர், அண்ணல் இராமனுக்கோ சீதை
பிறன் மனை கவர்ந்த இராவணன் மடிந்திட, பிறன் மனை
நயந்த தேவர்களையும், தெய்வங்களையும் அழித்திட. அறிவாய்
இனியொரு அவதாரம் பகுத்தறிவேயன்றி வேறில்லை மானுடா.

ஆடையின்றிச் சென்ற அழகிய சிவனைக் கண்டு, ரிஷி பத்தினிகள
மோகம் கொண்டதும் புராணம், தன் புத்திரிமேல் மோகம் கொண்டு
மானுருக்கொண்டு பிரம்மனும் புணரச் செல்ல, ஐந்து தலை
பிரம்மனின். ஒரு தலையைச் சிவன் கொய்ததும் புராணம்

இழிந்த கதைகளும், இறை நிந்தைகளும், நிறைந்த
புராணங்களில் உண்மையேது?,கடவுளையும், மனிதனையும்
காமம் தீரா நோயாய் வாட்டிட, ***மன்மத லீலையை***
***வென்ற மாமுனி மனுமகன் ஒருவர்தானோ?***

காமசூத்திரம், வாத்ஸாயனர் கலைப்படைப்பாக
கற்றதெல்லாம் மறந்தாலும், காமம் மட்டும் மடியாத
மெய்யின் சூத்திரம், உயிர் மெய்யில் கலந்த
உணர்வை எழுப்பிடும் காமனின் மன்மத அஸ்திரம்

காயடித்த விலங்குமுண்டு-வேலைக்கு,
ஆண்மை பறித்த அண்ணகருமுண்டு சேவைக்கு,
உறை போட்ட குறி கொண்டு யோனி உழுங்காலத்தே
கருச்சிதைவு உயிர்பலி கடந்த காமப்பலியாவது வேதனை

ஆணும், பெண்ணுமாய் தன் சாயலாய் மனிதரைப்
படைத்த இறைவன், பல்கிப் பெருகி, பூமியை நிரப்புங்கள்,
நான்கு வேதங்களக்கு முந்திய காதல் வேதம்,
கற்றுக் கொடுக்க முடியாத ஆதி வேதம்

மறப்பார் என்றோ ஏட்டில் எழுதிய நான்கு வேதங்கள்
மனிதன் மறவாது படைப்பைத் தொடர, உயிர் மெய்யில்
இறைவன் எழுதிய காமவேதமாய் ஆதி வேதம்,
அழியாத படைப்பின் பரிணாம கீதம், சொல்லித் தெரிவதில்லை-
ஆய கலைகளுக்குள் அடங்காத மன்மதக் கலை?

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-30-09-2023*

# கங்கை நதியோரம்



பிறப்பு காமன் கலையாக, இறப்பு காலன் கலையாக
பிறப்பு, இறப்பு இரு கரைகளுக்கிடையே
வீடு தேடி ஓடும் நதியாய் மனித வாழ்வு



வாழும் கலையறிந்த கலைஞனே
கரை சேருகின்றார்
வாழ்வை அருங்கலையாய் வாழ்ந்து
பேரின்ப வீட்டை அடைகின்றார்

சுழியும், சுனாமியும், சூறாவளியும்
அலையும், அமைதியும் நிலவிடும்-வாழ்வு
ஆழமறியாப் பெருங்கடலே

பொய்யான மெய்யை தீயில் எரித்து
பூத்த நீறைக் கங்கையில் கரைத்து
கனவான வாழ்வு கரையேற
அணையாத் தீ எரியும் காசி -சிவ பூமி

இராப்பகலாய் ஓய்வின்றி எரியும் சிதைகள்
ஓயாது ஒலிக்கும் உறவுகளின் அழுகை, ஒப்பாரிகள்
நாளும், பொழுதும் ஓதும் மந்திர ஒலிகள்

நாறி மணந்து, நாளும் பிணம் சுமந்து
ஓடும் கங்கையின் மனதில் ஆறாத் துயரம்
அந்தியில் ஆடம்பரமாய் அக்கினி ஆராத்தி எடுத்து
கங்கையை வாழ்த்துவது வழிபாடான அவலம்?

காசேதான் கடவுள் என வாழ்ந்து
செல்லாக்காசான வாழ்வை அறிந்த மனம்
காசியில் உடலை உதிர்த்தால் புண்ணியம்
எனக் கனவு கண்டு துறவு பூண்ட தினம்

ஓடிக்களைத்து ஊர்ந்து நின்ற ரெயிலில் ஓர் பெரியவர்
கையில் பெட்டியும், தோளில் பையுமாய் இறங்கிட
அன்போடு வரவேற்ற சைக்கிள் ரிக்ஷா ஓட்டுனர்
அலாவுதீன் எளிய இளைஞன்



தங்குமிடத்தைக் காட்டியவன் தன் தொழிலில்
நாளும் பல பயணிகளை கண்டவன்
காசி வருவோரை கைலாயம் வரை
கூட இருந்து வழியனுப்பும் ஞானபுத்திரன்

ஒட்டறையும், அழுக்குச் சுவரும், பாசி படிந்து நாறும்
கழிப்பறையும், அழுக்கு மெத்தையும் வயிற்றைக் குமட்டிட
வாழ்ந்த சொகுசு வாழ்வு ஏற்ற துறவைப் பழித்தது

மூன்று நாட்கள் இங்கு தங்கலாம்-விடுதி உரிமையாளரின்
கட்டளையாக, விடியலில் எழுந்தவர்-கழிப்பிடம் செல்ல
விரியத் திறந்து கிடந்த அறைகளில் மரண வாயில் திறந்திட
மெல்ல மடியும் முதிர்ந்த உறவுகள்

ஏழ்மையும், அறியாமையும் வாழ்வை வருத்த
கங்கையில் குளித்து, கங்கா தீர்த்தம் பருகி
காசியில் மரித்தால் மோட்சம்
முன்னோர் சொன்ன வாக்கோ வேதம்

இன்றோ, நாளையோ-மடிபவர் தங்குமிடம்
தம் இருப்பிடம் அறிந்தவர் திகைத்திட, அன்போடு தேடி
வந்து, இருப்பிடம் மாறிட உதவிய அலாவுதீன்

காலையில் காசி விஸ்வநாதர் தரிசனம், மாலையில்
அலாவுதினுடன் உரையாடி கங்கைக் கரையில்
உலாவிட-மனதிலே அமைதியின் ஆனந்தத் தரிசனம்

கொஞ்சும் சிறார் ஓதும் வேதம் நெஞ்சை நெகிழ்விக்க
ஏழைச் சிறுவர்களுக்கு பாடம் சொல்லி கொடுத்து
இன்பமாய் நாட்கள் கழிய-அமைதியான நதியில்
ஓடும் ஆனந்த ஓடமான வாழ்வு

காசி விஸ்வநாதரை நாளும் தொழுது, கங்கைக்
கரையில் எரியும் சவங்களைக் கண்டு மனம் தெளிந்து
நிலையற்ற வாழ்க்கை நீர்க்குமிழ் போன்றது புரிந்து
எல்லாம் அவன் செயல் எனச் சரணடைந்த பொழுது

அமைதி கோலமிட மலரும் வாழ்வோஅழகு
கோடிகள் இருந்தும் அமைதியோ எட்டாத வான்மதி-
இறைவா நீயே என் கதி-மனம் சரணடைந்திட
இதயத்திலோ இனம் புரியாத நிம்மதி

ஓர் நாள் மாலை உலாப்போன வேளை கடைத் தெருவில்
கண்ட பத்திரிகைச் சேதி , பிரபல தொழில் அதிபர்
கண் மறைந்த மாயம், சொத்தைப் பிரித்திட நீதி மன்றத்தில்-
வாதப் பிரதிவாதத்தால் வெளுக்கும் உறவுகளின் சாயம்

பல்லாண்டு உழைத்து தேடிச் சேர்த்த செல்வத்தை
ஊதாரிப் பிள்ளைகள் போராடிச் சீரழிப்பதா?
மனம் துடிக்க நெஞ்சம் பதைக்க நிஜரூபம் விழிக்க
பதறிப் பம்பாய் செல்லத் துடித்த செல்வர்

எல்லாம் துறந்த பின்னர், ஏனிந்தப் பயணம்?
நிலையற்ற வாழ்வு நீர்க்குமிழி போன்றது
கடவுளைத் தேடி காசி வந்த பின்னர்
கழித்த காசைத் தேடிப் போதல் முறையோ?

விழிகளில் நீர் எழுதி நெஞ்சம் பிரிவைச் சொல்ல
மொழிகளால் ஆசி கூறி இதயம் நன்றி சொல்ல
இதயங்கள் இணைந்த உறவில் மதங்கள் இல்லை
அன்பே தெய்வம் என்றும் மாறாத அழகு நிலை

இரயில் நிலையம் கொண்டு வந்து விட்டவனை
ஒரு மகனாய் நீயும் என் வாழ்வில் கலந்தாய்
என்னோடு வந்துவிடு செல்வனாய் வாழலாம்
நானோ பெருஞ் செல்வன், கோடிஸ்வரன்

காசியில் பூத்த துளசிபோல் என் வாழ்வு
காசிக்கு வெளியே மலராது-பாததூளியைத்
தொட்டு நெஞ்சில் வைத்தவனை
பாசத்தோடு அணைத்து விடை பெற்ற செல்வர்

அமைதி இழந்த ஆசை மனம்-பொன்மானை தேடி
ஓடிய பயணம், ஆசைக் கயிற்றில் ஆடிடும் பொம்மை
பொம்லாட்டமான வாழ்வோ மாயை

விழிப்புணர்வு இல்லாத ஏழை
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
வாழ்வான உண்மை

ஓடிய ரயில் சில மணி நேரம் கடந்து நின்றிட
காசி வருவோர் மறவாது இரசித்து சுவைக்க
பெயர்போன உணவகம்-பயணிகளை அழைக்க
ஆவலாய் உணவருந்திட விரைந்த மனிதர்

ஆசைக் கடலில் மூழ்கிய மனம் -ஆனந்த
அமைதியை இழந்த துக்கத்தில் ஆழ்ந்த தினம்
தெருவைக் கடந்திட தன்னுணர்வற்று விரைந்த கணம்
கடுகதியில் வந்து மோதிய கனரக வாகனம்

கணப்பொழுதில் கலைந்த கனவு
விழிப்புணர்வில்லா மனித வாழ்வோ
குழியில் விழும் குருடனின் இழிவு
பறை நாயாய் நடுத்தெருவில் சாவு

ஆசைக் கயிற்றில் ஆடிய பொம்மை
கயிறறுந்திட மண்ணில் விழுந்து நொருங்கிய பொம்மை
வாழ்வே மாயை மெய்யான உண்மை

நாதியற்று நடுத்தெருவில் அகாலமாய் மரித்திட
நகரசபை வண்டி எடுத்துச் சென்ற அநாதைப் பிணம்
கோடிகள் இருந்தும் கொண்டு செல்ல முடியாத பணம்
பாதை மாறிய பயணம் வீடு சேரமுன் காடுபோன பிணம்

பேச்சடங்கி மூச்சடங்கிட சிவமும் சவமே
ஊர் கூட்டி உறவுகள் சேர்ந்தழுது
சுடுகாட்டில் தீ மூட்டிட-சாம்பலாகும் உறவு
மனித வாழ்வோ வெறும் கனவு

உண்டு குடித்து கலவி செய்து செல்வம் சேர்த்து
“அப்பத்தால்” வாழ்ந்த கோடிஸ்வரன்
“இறை வார்த்தையை” வாழ்வாக்கியிருந்தால்
அவனோ என்றும் வாழும் ஈஸ்வரன்

சிந்தையை எரித்திட்ட மனதிலோ அமைதி
ஆசைத்தீயில் வெந்திடும் மனதில் எங்கே நிம்மதி?
பொன்மானைத் தேடிய ஸ்ரீராமன்
புண்பட்டுத் துன்புற்ற சீதாராமன்

காசித் தெருக்களில் உலாவரும் அலாவுதீன்
மதங்கடந்த சமாரியனாய் மானுடத்திற்கு நீட்டும்
உதவிக்கரம், ஏழையின் வாழ்வில் போதுமென்ற
மனமே பொன் செய்யும் மருந்து நிலைத்த வரம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-30-09-2023*

# அன்பே சிவம்



அன்பே இறைவன், அன்பில் நிலைத்திருப்பவர்
இறைவனில் நிலைத்திருக்கின்றார்
இறைவனும் அவரில் நிலைத்திருக்கின்றார்



வாழ்ந்தறியும் உண்மையே சத்தியம்,
சத்தியமோ மனம் கடந்த தரிசனம்
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

வார்த்தை கடந்த சத்தியத்தை, வார்த்தைக்குள்
அடக்க முற்பட்ட தத்துவம்-சத்தியமோ
வார்த்தைகளால் எச்சிலாக்க முடியாத புனிதம்



பிரம்மம் என்னும்போது தத்துவம்
அப்பா, தந்தாய் என்னும்போது இரத்த பந்தம்
கடவுள் நம் தந்தை, நான் உங்கள் சகோதரன்
இறைசாயலான மானுடமோ உன்னதம்




அறிவு கடந்த பரம்பொருள் நம் தந்தை,
அப்பா, தந்தாய் உறவு சொல்லி உரிமையோடு
அழைக்க கற்றுத் தந்த மனுமகன்
சாதியம் கடந்த தேவமகன்

புத்த நிலை உங்களுக்குள்ளே
நீங்களும் புத்தராகலாம்-புத்தரை
தெருவில் கண்டால் கொல்லுங்கள்

அத்வைதம், விசிட்டாதுவைதம், துவைதம்,
ஆதி சங்கரர், இராமானுஜர், மத்துவர் வகுத்த தத்துவம்
பரமாத்மா, ஜீவாத்தமா உறவினை
விளக்கும் சித்தாந்தங்கள்




இருப்பவர் நாமே, சடமும் சத்தியுமாய்
எரியும் முட்செடியில் தம்மை-மோஸேக்கு
எண்பித்த இறைவன்-நொருங்கிய மனமே -நாம்
வேண்டும் காணிக்கை மொழிந்த தலைவன்




அன்பிற்கு, சூனியத்துக்கு, சத்தியத்திற்கு
இருப்பிற்கு எல்லை வகுத்த தத்துவம்
அன்பு, கருணை உண்மையைப் புறந்தள்ளி
அறிவுக்கனியின் பல்சுவை விசாரம், வித்தகம்

தெய்வநிலை, விலங்கு நிலைக்கிடையே
ஊசலாடும் மனித நிலை-உயர்ந்தால்
தெய்வம், தாழ்ந்தால் விலங்கு
உள்ளுணர்வின் உன்னதமே இறைவன்






உருவம், அரவுருவம், அருவமாய் தோற்றம்
நிர்க்குண, சகுண பிரம்மம்மாய் மாற்றம்
தத்துவ மனங்களுக்கு பன்முக தரிசனம்
புத்த மனதிற்கு சூனிய தரிசனம்

***ஏகம் சத் விப்ரா பகுதா வதந்தி-***
உண்மை ஒன்றே- அறிந்த சான்றோர்
பலவாகச் சொல்கிறார்கள்




அன்பில் நிலைத்து, உண்மையைத் தவமாக்கினால்
வாழ்வே வழிபாடு, எல்லா உயிர்களையும்
தம்முயிர்போல் அன்பு செய்தால்-அஹம் மிரம்மஸ்மி
அதுவே நாம் சத்தியத்தின் நிலைப்பாடு



அன்பு இறைவனோ நம் தந்தை, தந்தையும்
மகனும் உறவாட தரகர்களும், சாதிய மதங்களும்
புரியாத தத்துவங்களும் எதற்கு? அன்பே சிவம்,
உண்மையே தவமானால் எல்லாம் இன்பமயம்




ஆலயம், பள்ளிவாயில்களை இடியுங்கள்
அன்பு இறைவன் வாழும் இதயத்தை
அன்பால் நிறையுங்கள்-தெய்வீகம்
உங்களை நிறைக்கும், சத்தியம் தரிசனமாகும்

முன்னோர் சொன்னார், வேதம் சொன்னது
எதையும் நம்பாதீர்கள், சத்தியம் தரிசனம்
அனுபூதியில் அறியுங்கள்
உண்மை உங்களுக்கு விடுதலை அளிக்கும்




தத்துவங்களோ அறிவின் மொழி, ஞான யோக வழி
அன்போ இதயத்தின் மொழி , தந்தை, தாயாய்
நம் இறைவன், நாம் அவர் குழந்தைகள்
அகமகிழுங்கள், உங்களை நீங்கள் அறியுங்கள்




ஆணவ மனதை கடந்தால் அடைவதோ
பரிபூரண சுதந்திரம், நாமோ சின்மயம்
சச்சித் ஆனந்தமே நம் சுயம்

சாங்கியம், யோகம், ஆசீவகம், சார்வகம்
சனாதன தர்மத்திற்கு முந்திய மதங்கள்-மானுடத்தைப்
சாதியத்தால் புண்படுத்தாத உன்னதம்
சமணம், பௌத்தம் அகிம்சையின் வேதம்



அக்கினி, இந்திரன், சோமன், வாயு, சந்திரன்
ருத்திரன், வேதகாலத்து தெய்வங்கள்,
சைவம், வைஷ்ணவம், கௌமாரம், கணாபத்தியம்,
சாக்தம், சௌரம் நிலவிய வைதிக மதங்கள்
சங்கரர் நெறிப்படுத்திய தவங்கள்

சிவனுக்குத் தாரமாய் பார்வதி, பிள்ளைகளாய்
முருகன், கணபதி, பார்வதிக்கு அண்ணனாய் விஷ்ணு,
ஆறு மதங்களை ஒன்றாக்கிய நாதம்
சைவம், வைஷ்ணவ மோதல்கள் சுருதி தப்பிய கீதம்

*இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க*
*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
*Pax Ravichandra-03-11-2023*

பிரம்மத்தின் இரண்டற்ற நிலை.அத்வைதம்
2. பிரம்மத்திலிருந்து ஆன்மா வேறுபடாத நிலை.
3. உலகத்தின் உண்மையற்ற நிலை.

- இறைவன் நம்மோடு இருக்கிறார் என்பது அத்துவைதம் (துவைதம் அற்ற நிலை)இ (இரண்டற்ற ஒருமை நிலை)
- நமக்கு முன்னும் நமக்குப் பின்னும் இறைவன் இருப்பதால் இறைவன் வேறுஇ நாம் வேறுஇ மழை நமக்குள்இ நம்மால் இயங்குவது இல்லைஇ - என எண்ணி இறைவனையும்இ நம்மையும் இரண்டாகப் பார்ப்பது துவைதம்.
- இந்த இரண்டு கோட்பாடுகளையும் ஒப்புக்கொள்வது விசிட்டாத்துவைதம். (செவ்விருமை)

வேதாத்திரி மகரிசி விளக்கம்

- நமக்கு முன் உணவு (துவைதம்)
- வயிற்றுக்குள் உணவு (விசிட்டாத்துவைதம்)
- உணவு நம் உடலில் சத்தாக மாறிய நிலை (அத்துவைதம்

துவைதம் த்வி என்றால் இரண்டு. இறைவன் ஒருவனே சுதந்திரமானவன்இ உலகு உயிர் ( பரதந்திரமானவை ) வேறானவை. இறைவன் தனிஇ மற்றவை அதில் சேராதவைஇ பரமாத்மாஇ ஜீவாத்மாஇ ஜட உலகம்-இவை எவராலும் உண்டாக்கப்படாத நித்தியப் பொருள்கள். உலகம் ஒரு தோற்றம் அன்று. சுதந்திரம் இறைவனுக்கு மட்டும் உண்டு.

கர்மத்தை நீக்கினால் வீடுபேற்றை அடையலாம்.[1ஸ துவைத தத்துவத்தை தோற்றுவித்தவர் மத்வர் ஆவார்.

சங்கரரது காலத்தில் இம் மதங்களிடையே போட்டி பொறாமைகள் இருந்தன இவற்றை சீர் செய்து ஒவ்வொரு மதத்திற்குமான ஆகமங்கள் பிராமண நூல்கள் என்பவற்றை வகுத்து இம் மதங்களின் முழுமுதற் கடவுள்களிடையே உறவு முறைகளை நிலை நாட்டி சண்மதங்களை மீள் ஸ்தாபனம் செய்தவர் ஆதி சங்கரர் ஆவார். இம் மதங்கள் இன்று வரை செல்வாக்குடனும் இ சிறப்புடனும் விளங்குகின்றது.[3ஸ

- சைவம் - சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயப் பிரிவு.
- வைணவம் - விஷ்ணுவையும் அவரது பத்து அவதாரங்களையும் வணங்கும் சமயப் பிரிவு.
- சாக்தம் - சக்தியை வணங்கும் சமயப் பிரிவு.
- கௌமாரம் - முருகனை வணங்கும் சமயப் பிரிவு (குமரனை வணங்குவது கௌமாரம்).
- சௌரம் - சூரியனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயப் பிரிவு.
- கணாபத்தியம் - விநாயகரை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயப் பிரிவு.
- ஸ்மார்த்தம் - சிவன்இ சக்திஇ விஷ்ணுஇ கணேசர்இ சூரியன் மற்றும் முருகனை வணங்கும் சமயப் பிரிவு. மேலுள்ளவற்றில் முதல் ஆறு பிரிவுகளையும் உள்ளடக்கியது சுமார்த்தம்.

கௌமாரம் மற்றும் கணாபத்தியம் ஆகியவை சைவ மதத்தின் துணைப்பிரிவாகக் கருதப்படுகின்றன

# மெய் எனும் பொய்

-----------------------------------------------------------



காற்றும், மலமும், சிறுநீரும் கலந்தோடும்
கழிவுச் சாக்கடையோ-தேகம்
விந்தும், குருதியும் , வியர்வையும் ஒழுகிடும்
ஒன்பது வாயில் ஓட்டை குடிலோ, என் தேசம்

ஆசைத் தீயில் வேகும் மனம்-ஆவி
அடங்கிடச் சுடுகாட்டில் ஒடுங்கும்
மூப்பும், பிணியும் வந்து போகும் சத்திரம்
சடுதியில், சாவு வந்திடும், மனிதா பத்திரம்

உணவும், நீரும் உண்டு வளர்ந்து
ஆசைக் காற்றிலும், வெள்ளிக் கயிற்றிலும்
ஆடும் மாமிச பட்டம், ஆட்டம் முடிந்தபின் சவமாகி
சிவம்தேடி காட்டில் தவமிருக்கும் அதிசயம்?

எட்டு நாளில், சொந்தம் அறுத்து உறவே பொய்யாகும்
மாய உலகோ சத்திரம், எரித்தோ, புதைத்தோ,
கண்ணீரில் சோகமும், கங்கையில் சாம்பலும் கரைய
மறையும் மாயச்சொத்து, இருபால் உறவால் உருவான வித்து

அறம், பொருள், இன்பம் சுவைக்க-காமத்துப் பாலில்
விளைந்த வித்து, அறம் மறந்து இன்பம் சுவைத்து
வாழ்வைத் தொலைத்தால், நிலையான வீடு கனவாகும்,
சுடுகாட்டில் வாழும் அவலம் கேடாகும்

இறைவன் கட்டிய மண் குடிசை இது, சடுதியில்
இடிந்து விழுமுன், மனிதா உண்மையைத் தேடு
சத் சித் ஆனந்தம் குடியிருக்கும் கோயிலிது
ஆத்ம தரிசனம் காட்டும் ஞானக் கண்ணாடியிது

எழுமின், விழிமின் இன்னோர் பிறப்புண்டென்ற
கதையை களைந்து இன்றே பிறப்பறுமின்
அறிவாய் மானுடா உடலல்ல, மனமல்ல நீ

தத்துவமஸி -அஹம் பிரம்மஸ்மி-பிரக்ஞானம் பிரம்ம்
அறிய உதவும் அரிய வாய்ப்பு வாழ்வு
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம் இறை வாக்கு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-12-04-2023

# அன்னை தெரேஸா

---





கொல்கொத்தா தெருக்களில் நாறி மணக்கும் பிணங்களை
நகரசபை வண்டிகள் குப்பைகளாய் அள்ளிச் செல்ல,
கூடியழும் சொந்தமெனக் கூட்டமாய்க் காகங்கள் கரையும்

காணும் காட்சி நாளும் நடக்கும் ஒன்றென -ஒதுங்கி
மூக்கைப் பொத்தி நடையை கட்டும் நகரவாசிகள்
சொறி நாய்களாய் தெருக்களில் ஏழைகளின் சாவுகள்

இரக்க மழையின்றி காயும் மனம்-வறுமையும்-
தொழு நோயும் வருத்தும் வாழ்வோ எரிநரகான சாபம்-
மரணமோ மாறாத வரம்- புலம்பும் ஏழை மனம்

எச்சில் இலைக்கும்-கந்தல் துணிக்கும்
குப்பைத் தொட்டியில் நாளும் போராட்டம்
நடைபாதையும்-மரநிழலும்-வாழ்வதற்கும்-
சாவதற்குமான தொழுநோயாளர் வாழிடம்



அழுகி நாறும் தேகம்-மருந்தின்றி வாட, பசிப்பிணி தீய்க்கும்
வயிறு பிடி சோறின்றிக் கதற, கடந்த சென்ற மனிதர்
எல்லாம் விரைந்து சென்றார், கல் மனம் படைத்த,
குரு லேவியர்போல், விலகிச் சென்றார்.

நாதியற்று நாறும் மானுடத்துக்குச் நாய்களும், பூனைகளும்
சொந்தம் சொல்லும், போகிப் பண்டிகையில் எரித்திடும்
ஆடைகளும், மணந்திடும் பொங்கலும்-ஏழைகளுக்கு
கிட்டாத கோயில் பிரசாதமாகும்.



நாளும் செத்துப் பிழைக்கும் வாழ்வில்
சுகம் என்பது பகல் கனவாகும்
மரணம் என்பதோ சுதந்திரமாகும்

ஈகையும் இரக்கமும், வேதங்களில் உறங்கிட
அன்பையும் பகிர்தலையும் நெஞ்சம் மறந்திட-
மனிதனைத் தேடி ஏழையின் வடிவில்
இன்றும் அலையும் இறைவன்

குப்பைகளைக் கோழிகளாய்க் கிளறி சேரி வாசிகள
வயிறு பிழைக்கும், சுத்தமும் சுகாதாரமும்
கூடவே கல்வியும் தீண்டாத ஜாதிக்கு
எட்டாத நிலவாகும், வாழ்வு எரி நரகாகும்

கண்ணீர்க் கடலில் தத்தளிக்கும் ஏழைகளைக்
கரையேற்ற முடியாத தெய்வங்கள்-கர்பக்கிருகத்துள்
பொன்னாபரணங்களில் மின்னும் கற்சிலைகள்



தெய்வங்களுக்குதான் எத்தனை கைகள்? எத்தனை
ஆயுதங்கள, திருடர் பயம், தெய்வங்களுக்கும் உண்டு போலும்
தெருவில் இரக்கும் ஏழை மனம் எண்ணி வாடும்.



சிலை திருடி விற்றவர் செல்வராயிட
கோயில் கட்டி கும்பிட்டவர் தலைவர்களாயிட
உயர் ஜாதியோடு சோரம் போன தெய்வங்களை
கல்லாய் சபித்த “கடவுள்” யாரோ?

கல்லான உள்ளங்களுக்குச் சிலைகளும் தெய்வங்கள்
கண்ணெதிர துன்புறும் மனிதங்களோ
கர்ம வினையான தீண்டாமையின் சாபங்கள்

பட்டினியால் ஏழைகள் வாடப், படையல்கள் குவிந்து
பாற்குடங்கள் கவிழ்ந்து பாலாறு ஓட, புரியாத மொழியில்
மந்திரங்கள் முழங்கிட அரங்கேறும் திருவிழாக்கள்



கோடிகளால் நிரம்பிடும் உண்டியல்களும்
தங்க-வைர ஆபரணங்கள் குவிந்த நிலவறைகளும்
“தெய்வங்கள்” “சாமிகள்” வாழும் கோயில்கள்,
பசியும், நோயும் வாழும் சேரி தீண்டாதான் குடியிருப்புகள்

இறைவனும் முதலாளி வர்க்கமாய் உயர்ந்திட, தொழிலாளி வர்க்கம்
சூத்திர சாதியாய் நாறிட,மேல் ஜாதி எழுதி வைத்த புராணப்பொய்களில்
“சாதி அடக்குமுறை” மனுஸ்மிருதியானது-நூற்றாண்டுகளாய்
மகாத்மாக்களாலும் திருத்தி எழுதப்படாத அநீதி தீர்ப்பானது.



அதிகார முதலாளிவர்க்கம்
உழைக்கும் தொழிலாளிவர்க்கத்திற்கு பூட்டிய
‘இரும்பு நுகமோ’ சாதியம்?

மனுவின் ஜாதியத் தீயில் நாளும் தீயும் தீண்டாதன் ஜாதி
வறுமை காட்டுக்குள், தொழுநோய்த் தீட்டுக்குள் நாறி மணந்து
மரணவாசலில் நிற்கும் தெருவாசிகளோ பறை நாய்களான ஜாதி.

சுமைதாங்கியில்லாத வாழ்வில், உருவழியும் உயிர்கூட
உடற் கூட்டில் இமயமாய் கனக்கும், பசி தீய்க்கும் வயிற்றை,
நோய் உண்ணும் உடலை-நாறும் சதைக்கோளம் எனச்
சமூகம் வெறுத்தொதுக்கிட, கண்ணீர் பெருக்கெடுக்கும்
இதயம் காணாத இறைவனைக் கூவிக் கதறும்

மூப்பு, பிணியு, பசி ஒன்றாய் வாட்டிட-
எரியும் மெழுகாய்த் தேகம் உருகி அழுகிட
காட்சியளித்த இயேசுவின் வாடிய முகம்
அன்னையின் பயணத்தை மாற்றிய அதிசயம்






"வெற்றிக்காக அல்ல-விசுவாச வாழ்விற்கே"
என் அழைத்தல் என, இறை அழைப்பை ஏற்று
சிறு தொண்டனாய் தன் வாழ்வையும்-தாயே
ஏழைத்-தெருவாசிகளுக்கு நீ அர்ப்பணித்தாயே

நான் சமூக சேவகியல்ல-இறைமகன் அன்பினை
ஏழைகளோடு பகிர்ந்திட-இறைவன் தெரிந்த கருவி
என்றாய், என் வாழ்வின் மையம்-என்றும் இயேசு
என வாழ்வால் சாட்சியம் பகிர்ந்தாய்.



உனக்கென எதையும் உடமையாக்காமல்
உன் வழியாய் இறைமகன் அன்பையும்
ஏழைகளுக்குப் பொதுவுடமையாக்கினாய்.

அன்புமழையின்றி வாடிக் கிடந்த ஏழைகளை, தோளில் சுமந்து
வாழ்வு கொடுத்த தெய்வத்தாய் நீ, வங்கப் புரட்சியின்போது
சொந்தங்கள் ஒதுக்கிய மானபங்கத்துக்காளான மங்கையருக்கு
தாயாய் மாறி, சேயாய் ஏற்று வாழ்வு கொடுத்த தெய்வம் நீ




வல்லாங்காள் விழைந்த களைகளெனத்- தாய்குலம்
ஒதுக்கிய குழந்தைகளை-தத்தெடுத்த தெய்வத்தாய் நீ.
எல்லோரும் இறைவன் குழந்தைகளே முழங்கிய
புதுமைப் பெண்ணும் நீ



சேரிக் குழந்தைகளுக்கு-எட்டாக் கனியான கல்வியையும்
காலடிக்கு எடுத்தச் சென்று சுவைத்திட கொடுத்த
கலைமகள் நீ, நாறி மணந்த சேரிகளுக்குள்
சுத்தம் வாழ சுகந்தம் வீசிய தென்றல் நீ.

ஏழைச் சேரியில் கூடுகட்டிய வண்ணமயில் நீ
இருண்ட இரவுகள் விடிந்திட-ஏழைகளுக்காய்
கூவிய-தேவனின் வெள்ளைச் சேவல் நீ.

ஜாதித்தீயில் நாளும் வெந்து, வறுமை நரகில் வாடி
மூப்பும் பிணியும் வாட்டிட, தெருநாய்களாய்ச்
சாகும் வாழ்வில், இறைவன் பொழிந்த அன்பு மழை நீ

உன் புன்னகையால் ஏழை முகங்களிலும்
புன்னகைப் பூக்கள்-உன் தோழமையால்
இருண்ட நெஞ்சிலும் புதிய விடியல்கள்.

ஏழைகளுக்காய் இரந்துவாழும் ஏழையானாய்
உன் மீது காறி உமிழ்ந்த எச்சிலையும் உனக்கென ஏற்று
உமிழ்ந்தவனிடமும் ஏழைகளுக்காய் இரந்த நின்றே
இரும்பு மனமும் இளகிடச் செய்தாய்.






இன்றும் உன் வீட்டு வாயிலில். பகிர்ந்து வாழ்தலின்
புனிதத்தை புரிந்து- உள்ளதைப் பகிர்ந்திடக் கூடும்
கூட்டம், உன் அன்பு செய்த அதிசயம்.

பிறந்த மண்ணைத் துறந்து-வாழ்ந்த மண்ணை வளமாக்கிய
தேவ கங்கையே-அன்று சேரியை நோக்கிய உன் சின்னக்
காலடித்தடங்கள், இன்று பல நாடுகளில் உள்ள ஏழைகளுக்கும்,
தெருவாசிகளுக்கும் இறை ஆசிராய் மாறிய அதிசயம்தான் என்னே!

உன் சின்ன உருவத்துள் பெரிய இதயம் வைத்து
உன் அன்பைச் சுவைத்திட இறைவனும்-
துன்புறும் மனிதனாய்க் காட்சி கொடுத்தாரோ?

மயங்காத உன்னிதயம்-ஏழைகளின் புன்சிரிப்பில் மயங்கியதென்ன?
தீண்டாமை, வறுமை, தொழுநோயை எதிர்த்துப் போராடும்
ஏழைகள் வாழ்வு புதிய குருஷேத்திரமாக உன் அர்ப்பண சேவை
அன்பின் புதிய கீதையான அதிசயம்தான் என்னே!






வசைமொழிக்கும் வாடாத உன் செவிகள்
எச்சில் தூறலிலும் புன்னகை மாறாத உன் பூமுகம்
ஏழைகளை தேடியலைந்து சோராத உன் கால்கள்
இரந்தும் கொடாத மனங்களை -அன்பினால் இளகவைத்த
பொன் மனம்-அற்புதத்திலும், அற்புதம் அம்மா

உழைத்து தேய்ந்து பொன்னாய் ஒளிரும் தேஜஸ்-
ஏழைகளில் துன்புறும் இயேசுவைக்கண்டு
நீ பூண்ட பணிவாழ்வோ பெருந் தவம்
எல்லா புகழும் இறைவனுக்கே என்ற செபம்-
அம்மா இறைவன் உமக்களித்த பெருவரம்



உன் புரட்சிப் பயணத்தில் பூக்களைவிட முட்களதிகம்
போற்றுதலை விட தூற்றுதல் அதிகம்-
இன்றோ, புகழாரங்களும்-விருதுகளும்
நோபல் பரிசும்-புனிதை பட்டமும்-



பரிசுகளும், வாழ்த்தொலிகளும் உன் சேவைக்கு
ஈடாகாது-மடிந்தும், மடியாது தொடரும்
உன் சபையின் சேவைக்கு புகழாரமாகாது

அவதார புருஷர்களும், தீர்த்தங்கரர்களும்-புத்தர்களும்,
கபீர்களும்-பாபாக்களும், பரமஹம்ஸர்களும்-பரமாத்மாக்களும்
மகரிஷிகளும், மகாத்மாக்களும் உலாவிய பூமியில்
பகவத் கீதையும்-தம்ம பதமும் பாடிடும் தேவபூமியில்-
உன் அர்ப்பண வாழ்வு -வாழும் கிறிஸ்துவிற்கு சாட்சியமே
சத்திய தரிசனமே, அன்பின் பேரதிசயமே

***அன்பே சிவம் என்பதற்கு உன் வாழ்வே சாட்சி***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே உன்தன் மாட்சி***



I am called not to be successful- but to be faithful.
Mother Teresa




**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-04-10-2023

# நம்பிக்கை

---

நம்பிக்கை வாழ்வின் பலமும், பலவீனமுமாய் மாறிட-
நம்மை நாம் அறியும் மெய்யறிவே-ஞானம்
அதுவே மதங்கடந்த தனி மனித ஆன்மீகச் சுதந்திரம்.

உண்மை வளர்ச்சிக்கு வழிகோல-மூட நம்பிக்கைகள் மானுடத்தை
முடமாக்கிட, கல்லும் சிலையும் தெய்வங்களாக
மதப்பயங்கரவாதம் தர்மமாகிட, நிலைகுலையும் உலக அமைதி
வரலாற்றில் மதங்களும், தெய்வங்களும் கண் மறைந்த நியதி

The whole moon and the entire sky are reflected in one dewdrop on the grass.

Dogen

ஆஸ்தீகம், நாஸ்தீகம், யதார்தவாதம் (agnosticsm)
மாறுபடும் கோட்பாடுகள்
எல்லாத் தத்துவங்களும் சார்புநிலை சார்ந்தவை
எதையும் சாராது தன்னில் நிற்பதே உண்மை

The Zen expression "kill the Buddha" means to kill any concept of the Buddha as something apart from oneself.

Peter Matthiessen

விரல் நிலவை சுட்டுகிறது-ஆனால் விரலல்ல நிலவு
என் விரலாய் நீ மாறதே-இல்லை, என் விரலை வணங்காதே
சுட்டும் திசையை பார்-சூனியம் புரியும்.

மெய் தத்துவம் அல்ல ***மெய்யான தரிசனமே முக்கியம்.***
***நம்பிக்கைனின் நம்பிக்கையை விட்டுவிடுதலே-அது***
பகுத்தறிவு உன் சுயம்- நம்பிக்கை உன் விலங்கு
உண்மைக்கு நம்பிக்கை தடையே

உண்மை உன் சிறகு-எழுந்து பற விரிந்த ஆகாயம் உனது.
நம்பிக்கை வெறும் ஊன்றுகோல், ஊனமுற்றவருக்கு தேவை
***புத்தநிலையும், இயேசு நிலையும் உனக்குள்ளே, வெளியே வெற்றிடமே-***
***உன்னையன்றி உனக்கு வேறு புத்தரும் இல்லை, இயேசுவும் இல்லை.***

What is important is not the right doctrine but the attainment of the true experience. It is giving up believing in belief.

Allan Keightley

உண்மை நம் சொந்த அனுபவம் ஆகாதவரைக்கும்-
நாம், விசுவாச ஊன்றுகோலைத் தேடுவோம்-அனுபூதியில்
உண்மையை அறிந்தால் பரந்த வான்வெளியில் நம் பயணம்
உண்மையே விடுதலையளிக்கும் நிதரிசனம்

நம்பிக்கை எனும் ஊன்றுகோலில் வாழ்வதை விட,
உண்மைத் தேடலில், முடமான காலில்
எழுந்து நிற்பது மேல், கடனாய்ப் பெற்றது வரவல்ல
உண்மையின் உழைப்பே நம் சொத்து.
இரவல் அறிவெல்லாம் தரவே, சுய ஞானமே நம் சொத்து.

மதவாதிகள் மத்தியில் கல்லும் தெய்வமாகும்
மதப்பயங்கரவாதத்தில் கொலைகளும் நீதியாகும்
நாமங்களும், நீறுகளும், சிலுவைகளும்,
தொப்பிகளும், காவிகளும் ஆசாரங்களாகும்

உண்மைக்குச் சாயமில்லை-தாய்மைக்கு வேஷமில்லை
அன்பிற்கு நீதியில்லை, இறைவனுக்கு மதங்களில்லை.
இருப்பே அது, சூனியத்திற்கு ஆதாரமில்லை
-சுதந்திரமே உண்மை

***முழுமையின் வெறுமையே கடவுள்***
***எல்லா மதங்களும் சார்பு நிலைத் தத்துவங்களே***
மதம் சார் இறைவன் -சார்பு நிலைத் தத்துவமே

நாம ரூபமற்ற தேவனுக்கு பல நாமங்கள் உருவங்கள்
உருவில்லாத் தோற்றங்கள், சூனியமும் வடிவமே-
காணமுடியாத தோற்றமே
தோற்றங்கள் மனதின் சார்புநிலை மாற்றங்களே
தத்துவங்கள், அறிவின் சார்புநிலை கோட்பாடுகளே

உண்மையை வார்த்தைகளால் உரைக்கமுடியாது
வார்த்தைகளில் கட்டுண்டதும் உண்மையல்ல

பௌத்தமும், சமணமும், தன்னைச் சார்ந்து நிற்கின்றன.
இறை கோட்பாடு ஏதுமில்லை
சூனியமே எல்லாம்-சூனியமே இறைவன்

கட உள் என்பது வினைச்சொல், தொடர்ந்த தேடல்
தேடலின் தொடக்கமும் நாமே, தேடலின் முடிவும் நாமே
தனி மனித ஆணவ நான் கடந்த , பெரு **நான்** இது
ஆணவம் துறந்த தூய மனமே அது

மெய்யான தரிசனம் கிட்டும்போது
சார்பு நிலை தத்துவங்கள் கனவாகின்றன
உன் சுயம் ஒளிர்கின்றது. நீ அதுவானாய்
சத்தியம் தரிசனம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10-8-2023*

# நான்-நீ

-----------------------------

நான் நானாக இருந்தபோது
செத்துக் கிடந்தேன் -நான் நீயானபோது
உயிர்த்தெழுந்தேன்



முத்தமழையில் நனைந்து
மோகத்தீயில் குளிர்காய்ந்து
சித்தமழிந்த நிலையில் சிவனானேன்

வேதம் புதிதல்ல-வழியும் புதிதல்ல
தந்திரா காட்டியது
வெறுமைக்குள் முழுமை

மோகத்தீ அணைந்தபின்
வேள்வித்தீயில் என்னை ஆகுதியாக்கி
உன்னில் கலந்தேன்

கடலில் விழுந்த மழைத் துளியாய்
நானும் கடலானேன்
இறகுகள் முளைத்திட எழுந்து பறந்தேன்
பிரபஞ்ச பிரக்ஞ்சையில் கலந்தே
கரைந்துபோனேன்.-இருப்போடு ஒன்றானேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-06-10-2023

# பூ

கழுமரத்தில் பூத்த மலர்-உதிரும் வரை
கருணைத்தேன் சிந்தியது
தந்தையே தாங்கள் செய்வது
இன்னதென்று இவர்களுக்குத் தெரியவில்லை
இவர்களை மன்னியுங்கள் என்றே
தம்மை வதைப்போருக்காகவும்
இறைவனிடம் மன்னிப்-"பூ" வேண்டியது

உதிர்ந்த பின்பும் தம் விலாவை ஊடுருவக் குத்திய
ஒற்றைக்கண் வீரர்க்கு-சிந்திய
துளிக் குருதியாலும் நீராலும் பார்வை ஈந்த
விழிப்பூ-இது

விண்ணின்று மண் வந்த இறைவாக்கு-
மதவாதத்தால் மாலை வருமுன் உதிர்த்த
மதவாத ஆணவமோ பொல்லாப்பு

தூவிய வார்த்தை எல்லாம் மல்லிகைப்பூ
துஷ்டருக்கோ பொறுக்காத சத்திய நெருப்பு
பூப் பூவாய் பூத்த மலைப்பொழிவோ பூந்தோப்பூ
வாழ்வும், போதனையும் ஒன்றாக
சிலுவையில் உதிர்ந்த வற்றாத பேரன்பூ

மனிதம் சூடாத பூ-மதங்களால் நாறி
மீன் சந்தைக்கு வந்த மலிவுப் பதிப்பூ?
வாழ்ந்தறியும் உண்மையை வாழ்வாக்கும்
மனங்களில் பூக்கும் அன்பூ

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10-04-2023*

# புல்லாங் குழல்

-----------------------------------

ஆறாத காயங்களான துளைகளில்-உன் அழகு விரல்கள்
நர்த்தனம் புரிந்திட, தித்திக்கும் திருப்பவளச் செவ்வாயிதழ்களின்
ஓயாத தெய்வீக முத்தம் உயிர்க் காற்றாய் என்னுள் உலா வந்திட
வறியவனாய் வாடிக்கிடந்த என்னில்-பரந்தாமனே,
வரமாய் உள்ளத்தை மயக்கும் உன் தேவகானம்

வெற்றுப் புல்லினும் உன்னால் தேவராக பிறக்க
வெறுமைக்குள் உன் உயிர்க் காற்றின் நடனம்
ஆனந்தராகத்தின் ஆலாபனமாய் மாறிட
ஏழை உள்ளத்திலோ பக்திப் பரவசம்.

உன் தொடுகையால் ஆறிய காயங்கள்
ஓயாத உன் செவ்விதழ் முத்தம் பருகி
போதையில் பாடிடும் தேவகானங்கள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-10-2023

# புனித யாத்திரை

---

விரல்கள் நாடி வீணை தவமிருக்க, துணையைத் தேடி-
ஒற்றைக்குயில் பாடிக் குரல் எழுப்ப-
வான் பார்த்து வாடிய பயிர்கள் தவமிருக்க,
கடல்நாடி உருவழியும் நதிகளின் "புனித யாத்திரை"

மலர் நாடி தேனிக்களின் புனித யாத்திரை,
அமைதி தேடி , காசி, இராமேஸ்வரம், ஹரித்துவார்,
ஹஜ், லூாட்ஸ்,கதிர்காமம் என
அலையும் பக்தர்களின் தீர்த்தயாத்திரை

நம் உள்ளே ஓங்கார நாதமிருக்க,
அள்ளக் குறையாத அமிர்தம் ஊற்றெடுக்க,
வெளியே தேடி வீணாய் போகும் வாழ்வு,
சூனியமே சுந்தரம், தூய மனமே சுதந்திரம்
அறிந்தால் மந்திரம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-10-2023

# பெருமான் புத்தரை தேடி

பக்தனாய், புத்தபெருமானைக் காணப் பல்லாண்டுகள் தொடர்ந்த
என் புனித யாத்திரை, உறவு துறந்து, உடமை களைந்து
சித்தார்தனாய் மாறிய தேடல். ஓர் நாள் என்னை அழைத்து வந்தது
நிரஞ்சனா நதிக்கரையோரம், நிலவு விழிக்கும் நேரம்



பெருமான் புத்தரோ அக்கரையில், பெரும் கூட்டத்தின் மத்தியில்
நானோ இக்கரையில், நதி கடக்க படகை தேடினேன்
படகு ஏதும் கண்ணில் படவில்லை

"The world holds the thought of self,
from this arises false apprehension,
The self is an error,
an illusion, a dream.
Open your eyes and awaken
see things as they are
and you will be comforted."

*Lord Buddha*

படகுகள் கிடையாது, புத்தரின் தரிசனம்ஒரு சுயமுயற்சி,
நதியை நீந்திக் கடந்தவரே பெருமானை கண்டார்
கூட்டம் சொலிய அறிவுரை வியப்பானது, அற்புதமானது



நதியை கடக்க யாரும் துணியவில்லை, நம்பிக்கை
மானுட நெஞ்சங்களில்லை, கூட்டமோ வேடிக்கை பார்க்க
நதியில் பாய்ந்தேன்- கடந்தால் புத்தரின் தரிசனம்
மடிந்தால் காலனின் தரிசனம்

மறுகரை தெரியாத நதியில் நீந்தினேன்
பல காத தூரம், பல மணி நேரம்

நதியின் மத்தியில் போராடமல், நீரோட்டத்தோடு நீரோட்டமாய்
மிதந்து வரும் காவியணிந்த பிக்குவின் பிணம்
நெஞ்சில் கலக்கத்தை மூட்ட, அஞ்சி, மனம் கலங்கி, விலகி
நீந்திட விடாப்பிடியாய் என்னைத் தொடர்ந்த விறைத்தபிணம்



உருவத்தில் என்னைப்போலிருக்கப் பார்த்தேன், நம்பமுடியவில்லை
நானேதான் பிக்குவின் கோலத்தில் பிணமாய் மிதந்தேன்
கடந்த காலம் கழிந்து போயிட, அறிவைச் சுமந்து ஆணவம் கொண்ட
என் பிணம் -நாதியற்று நதியில் மிதந்து போகின்றது

THE BIG INSIGHT

**Eastern philosophy says there is no "self." Science agrees**



All of us possess deeply ingrained beliefs without even realizing it. If I told you that my cup of coffee is "black" and also "not black," you might look at me oddly. That's because, in the West, we assume that the "law of non-contradiction" is true — that is, something cannot be both "A" and "not A" at the same time. Not so in some Eastern traditions. And maybe they're right. We know, for instance, that light is both a "wave" and "not a wave" at the same time. What about "the self"? The Western tradition assumes that there's a "me" somewhere in my brain that dictates most of what I do. But according to cognitive neuropsychologist Chris Niebauer, this is an illusion.

பிறப்பில் கொண்டுவராத அறிவை, விலக்கப்பட்ட கனியை
விரும்பிச் சுவைத்து, தகவல் அறிவாய்ச் சேர்த்து ஆணவம் வளர்த்து-
ஆன்மாவை மறைத்த " நான்" எனும் இருளை பிணமாய்க் கண்டு வியந்தேன்

பிணம் கடந்து போயிட, பேரானந்த சிரிப்பு வெடித்துப் பிறந்திட
என்னுள் பெருமான் புத்தரின் தரிசனம், நானும் புத்தரான அதிசயம்
என்னுள் புத்தமனம் விழிக்க, மீண்டும் குழந்தையாய் பிறந்தேன்
வானில் பௌர்ணமி ஒளிர்ந்தது-என்னுள் புத்த ஞானம் ஒளிர்ந்தது




புத்தநிலை என்னுள் இருக்க-வெளியே தேடியலைந்ததை
என்னுள் கண்ட ஆனந்தம் நிலைக்க கரை திரும்பினேன்
என்னை அடையாளம் கண்டவர் யாருமிலர்

கூட்டத்திடையே கூவினேன் என்னைத் தெரியவில்லையா?
அக்கரை செல்ல படகு தேடியவன், பெருமான் புத்தரைக் காண
-பெரு நதியை நீந்திக்க கடக்க நதியில் பாய்ந்தவன்
பெருநிதியைத் தன்னுள் கண்டவன்.

நம்புவார் யாருமிலர், அடையாளம் கண்டவரும் எவருமிலர்
பாதை மாறிய பயணம்-சித்தார்த்தன் புத்தனான ஞானப்பயணம்.
நானே கண்டேன், நானே உணர்ந்தேன்
"நான்" அழிய -சூனியம் மலர என்னே ஆனந்தம்.
ஆன்மாவே சூனியம், ஆனந்தத் தரிசனம்












**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra- 16-07-2023

# புதிய முகம்.

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

வெற்றுச் சிலுவை மார்பிலாட-வேதாகம் கையில் வாட
வீதி உலா வரும் போதகர்களே
உங்கள் போதனையால் இனவாதம் குணமானதா?
மதவாதம் மடிந்து, இறையரசு மலர்ந்ததா?

வாடி வீடுகளிலும், நட்சத்திர விடுதிகளிலும்
நல்ல சமாரித்தன் சேவைக்கான மாநாடுகள்
ஓலைக் குடில்களில் அகதிகளின் பிரார்த்தனைகள்

அகதிகள், அனாதைகள்,அங்கவீனர், விதவைகள்
என சங்கிலித் தொடராய் நீளும் ஏழைச் சமூகத்தை
மதம் மாற்றுதல்-ஓ மதவியாபாரிகளே
கறுப்புச் சந்தை வியாபாரமே!

ஊரிலே பல பிரிவினைச் சபைகள்-அன்பும்
ஒற்றுமையும் இயேசுவின் மாறாத போதனைகள்
பரிசேயரே உங்கள் வெற்றுச் சிலுவையில்
ஏழைக் கிறிஸ்துவை
அறைவதில் ஏனிந்த ஆனந்த நிலைகள்?

பிற மதங்களைத் தூற்றி மதம் மாற்றுவதில்-முத்தம் கொடுத்து
“இயேசுவை காட்டிக்கொடுத்த” யூதாஸின் முகம்.
இன்றும், முப்பது வெள்ளிக் காசுக்கு
இயேசுவைக் காட்டிக்கொடுக்கும் வியாபாரம்.
போலி ஆன்மீகம்-பவுலின் இரட்சணியப் பிரச்சாரம்

குணமாக்கும் கூட்டங்களால் குணமாகாத மதவாதம்
கொரோனா வாட்டிட சாரமற்ற உப்பான போதகம்
இயேசு வருகிறார்-சீக்கிரம் வருகிறார் ஆண்டுகள்
இரண்டாயிரம் கழிந்தும்-மாறாத
மதப் போலிகளின் ஓயாத மதப் பிரச்சாரம்
உன் கடவுளாகிய ஆண்டவரை
உன் முழு அறிவோடும், உன் முழு இதயத்தோடும்,
உன் முழு ஆற்றலோடும் அன்பு செய்வாயாக
அறியாத வேதம்-அங்கவீனச் சபைகள் ஓதாத மந்திரம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-04-2023*

# சதுரங்கம்

மலையளவு செல்வம், மாளிகை வாழ்வு
பணியாட்களோ நூறு-தினமும், உண்டு குடித்துக்
கொண்டாட, நண்பரோடு அறுசுவை விருந்து-சுவைத்து
மகிழ , இனிக்கும் இன்ப இரவில் -மது, மயக்கும் மாது



பூத்த அழகில் பூவையரோ பூவினம்
பொன்மேனியிலோ மயக்கும் பூமணம்
அழகோ, இனிக்கும் தேனினம்
குமுத வாயோ அமுதச் சுவையினம்



கனியினம் சுவைத்தும் திகட்டவில்லை
கன்னியினம் சுவைத்தும் காமம் சலிக்கவில்லை
மது போதையிலும் மனதில் அமைதியில்லை
மாதர் சம்போகத்தில் அமைதி எட்டாத நிலை

மண்ணிருந்தும், பொன்னிருந்தும்-மயக்கும்
மாதர் சுகமிருந்தும் நெஞ்சில் வெறுமை
கண்டதே காட்சி கொண்டதே கோலமான வாழ்வில்
நிறைவில்லை, மனதில் நிம்மதியில்லை

மதுவும் , மாதும் கசந்திட-சம்போகமான வாழ்வு
திகட்டிட, வாழ்வே மாயம் என்றானது,
அமைதியே பேரின்பம் அறிந்த மனம்,-தேவையைச்
சுருங்கி, வாழ்வைத் தேடலாக்கியது

ஜென் குருவிடம் வந்தவன் பணிந்து, ஒளிவு மறைவின்றி
உல்லாசி, தன் கதையை கூறி, பணிந்து வேண்டினான்
நான் அமைதி காண வழியுண்டோ? அருள் கூர்ந்து
அமைதி காணும் வழி என்ன? கூறுங்கள்

மனவுறுதியற்றவன் என்னால் தியானமோ,பிராத்தனையோ
நெடுநேரம் தொடரமுடியாது- துன்பமும், மரணமும்
நிறைந்த உலகில் எல்லாம் அநித்தியம் எனக் கண்டேன்

உன் வாழ்வைச் சீர் செய்யக் காலம் பல தேவை, மனமழிந்து
மீண்டும் குழந்தையாக நீ மாறவேண்டும், மனமாற்றமே ஒரே வழி-
எதையும் தொடரமுடியாத உன்னால் அதை அடைவது கடினம்
ஆயினும் உன்னை ஈர்க்குமளவிற்கு எதில் உன் ஆர்வம் ?

தன்னை ஆய்ந்தவன் மொழிந்தான்-சதுரங்கம்
எனக்கு மிகவும் பிடிக்கும்-இன்றும் என்னை விடாது
ஈர்க்கும் தீராத விளையாட்டு அதுதான்

அப்படியானால் என்னால், ஏதாவது செய்ய முடியும்
மொழிந்த குரு, அழைத்து வாருங்கள் ஆண்டுகள் பன்னிரன்டு
தியானத்தில் வாழும் அந்த துறவியை கூடவே-ஒரு
சதுரங்கப் பலகையையும் கொண்டு வாருங்கள் பணித்தார்



சதுரங்க ஆட்டமறிந்த துறவியோ பன்னிரு ஆண்டுத் தியானத்தில்
ஆட்டத்தை மறந்தார், உலகையும் துறந்துவிட்டார்
குரு கூறினார்-துறவியே கவனியுங்கள்
ஆபத்தான விளையாட்டு இது, நீங்கள் தோற்றால்
உங்கள் தலை துண்டிக்கப்படும்- ஆண்டுகள் பன்னிரன்டை
தியானத்தில் கழித்த துறவியை எனக்குப் பிடிக்காது

இத்தனை வருடகால தியானத்தின் பின்னரும்
நீங்கள் தோற்பதை நான் விரும்பேன்-என்
கையால் நீங்கள் இறந்தால் சொர்க்கம் உறுதி

துனுக்குற்ற இளைஞனை நோக்கியவர் சதுரங்கத்தை
முழு மனதோடு ஆடு, இது வாழ்வா? சாவா? என்ற பிரச்சனை
நீ தோற்றால் உன் தலை துண்டிக்கப்படும், சொர்க்கம்
உனக்கு நிச்சயமில்லை, ஆனால் ஏழாம் நரகம் நிச்சயம்



ஒரு கணம் தப்பியோட நினைத்த மனம்
திரும்பிப்போனால் தீராத அவமானம்
சமுராயின் மகன்-புறமுதுகிடுவது என்பது
அவன் இரத்தத்தில் இல்லாத ஒன்று

கோழையாய் வாழ்வதினும் வீரனாய் மடிவது மேல்
ஆட்டம் தொடங்கிட-துறவி. அமைதியோடு காய்களை நகர்த்திட
மெய் நடுங்கி வியர்வை பெருக்கெடுக்க-வாழ்வா? சாவா?
எனும் நிலையில் அவன் சிந்தனை நின்று போனது

மனதிற்கு கால அவகாசம் தேவை, மரணம் நெருங்கிட
எண்ணங்கள் மறைய-மனமும் மறைந்திட
மரணத்தை மறந்தவன்-வாழ்வையும் மறந்தே
ஆட்டத்தின் அங்கமாக மாறிப்போனான்

மனம் கழிந்திட-ஆட்டம் அழகாய் மாறியது
ஆரம்பத்தில் அற்புதமாக ஆடிய துறவி
இளைஞனின் சாதுாரியமான ஆட்டத்தால்
தடுமாறிடத் தோல்வி நிஜமானது

உடல் நடுக்கம் ஓய்ந்து, வியர்வை மறைந்திட-இறகுபோல்
எடையற்றவனாகி, உணர்வு தெளிவாகித் தூய்மையாக
அற்புதமாக ஆடினான்-அப்படி அவன் ஒருபோதும்
ஆடியதேயில்லை, வெற்றி நிச்சயமானது

அவன் கண்கள் தூய்மையாகிட
பார்வை அழகாய் மனம் விசாலமாகிடத்
துறவியை நோக்கினான்

அப்பழுக்கற்ற குழந்தை முகம்-தியானத்தால், அழகாய்,
ஜோதியாய் சோபிக்க பல்லாண்டுத் தவத்தில் புடமிட்டு பொன்னாய் அவர்,
எண்ணங்கள் , இலட்சியங்கள் கழிந்திட களங்கமற்ற மனம்
வைரமாய் ஒளிர ஒரு குழந்தையிலும் பேரழகாய் அவர் தோற்றம்

குழந்தை முகத்தை கண்ட இளைஞன் உள்ளம் அன்பால்
பொங்கியது, அவரது தலை விரைவில் வெட்டப்படும்-இதுவரை
உணராத சோகம் நெஞ்சை நிறைத்திட, விழிகள் பனித்திட
கருணை இதயத்தை நிறைத்திட, மனதிலே பூத்த அமைதி



ஆன்மா பூமழையில் நனைய, ஆனந்தப் பரவசத்தை
அறிந்தவன்-என்னே! ஆசீர்வாதம் இதுவெனப் பூரித்தான்

ஆட்டம் மாறிடத் தவறாக ஆடினான், இறப்பால் எனக்கு
இழப்பேதுமில்லை, துறவி கொல்லப்பட்டால்-அற்புதம்
ஒன்று அழிந்துவிடும், துறவியை வெற்றி பெறச் செய்ய
அவன் தப்புத் தப்பாக ஆடினான்

திடீரென மேசையை திருப்பி-காய்களை
கலைத்த குரு, தோற்றவர் யாருமிலர், இருவரும்
வெற்றியாளரே கூறிச் சிரித்தார்

துறவி சொர்கத்திலிருந்தார், தலையை துண்டிக்க அவசியமில்லை,
தலை துண்டிக்கப்படும் எனச் சொன்னபோதும், கடுகளவும்
அவர் கவலைப்படவில்லை, மனமழிந்த மகத்தான மனிதர்
வாழ்வு, சாவு-எதையும் ***அவர் தேர்ந்தெடுக்கவில்லை***
***அதனால்*** மரணபயம் கடந்த மனிதரானார்

துறவியின் வெற்றியை விட உன் வெற்றி மகத்தானது
தீட்சை தருகிறேன்-நீ இங்கே இருக்கலாம் -விரைவில்
நீ ஞானமடைவாய், தியானம், கருணை என்னும் இரண்டு
அடிப்படை விடயங்களும் உன்னில் நிகழ்ந்துவிட்டன.



ஐயனே, எனக்கு விளக்குங்கள், அறியாத ஒன்று
என்னில் நிகழ்ந்திட நான் மாறிவிட்டேன்-முன்பு வந்த
இளைஞன் நான் இல்லை, அவன் இறந்துவிட்டான்
என்னில் ஓர் அற்புதம் உங்களால் நிகழ்ந்தது புரிந்தேன்

மரணபயம் உன்னை நெருங்கிட. மனம் அழிந்துபோனது-
சிந்தனை மறைந்தது, தியானம் இயல்பாக நடந்தது
ஆனால் அது போதுமானதாயில்லை-உண்மையான
தியானத்தை தொடர்ந்து கருணை பிறக்கும் அதுவே முழுமை

உன் முகத்தைப் பார்த்தேன்-பேரின்பத்தால் நிறைந்து வழிந்தாய்
உன் கண்கள் -பெருமான் புத்தரினுடையதாய் மாறியிருந்தன
நீ துறவியைப் பார்த்தாய், தியாகத்தை உணர்ந்தாய்
ஏனெனில் அவரோ மிக உயர்ந்தவர் என்பதை அறிந்தாய்

இதுதான் கருணை-அடுத்தவர் நம்மை விட
மேலானவர் என்பதே மெய்யான அன்பு
உன்னையே நீ தியாகம் செய்ய துணிந்தாய்



வேண்டுமென்று நீ தவறாக ஆட ஆரம்பித்தாய், நானோ
காய்களைக் கலைத்தேன் நீ வென்று விட்டாய்-தியானம்,
கருணை இரண்டையும் நான் கற்றுத் தந்துவிட்டேன்
எதையும் சாராமல் -அவை உன்
***ஆன்மாவின் இயல்பாக மாறட்டும் அதுவே சந்நியாசம்.***

பணிந்து குருவின் பாதம் தொட்டு வணங்கிட
மனமுவந்து ஆசீர்வதித்தார் குரு

கருணையுடன் பேரானந்தம்-கருணையுடன் பரமானந்தம்
தியானத்தின் இலக்கே கருணை, விழிப்படையும்போது
கருணையின் பிரவாகம் உங்களுக்குள் பொங்கும்
கருணாமூர்த்தியாய் நீங்கள்
புத்தநிலை உங்களுக்குள்ளே-நீங்களும் புத்தரே

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra- 17-08-2023*

# சித்தனும் சிவமும்

---



வந்ததென்று மகிழ்ந்ததில்லை, போனதென்று நொந்ததில்லை
எல்லாம் தந்தை செயல் என்றறிந்தவனுக்கு
எப்போதும் இன்பமே, தூய மனமே சச்சித்தானந்தம்

ஆசைகள் கடந்த மனம் பரவெளியாக, ஆனந்த கூத்தனாய்
ஆடிக்களிக்க, இருமை கடந்த நிலையில்
நாளும் பொழுதும் சித்தானாய் வாழும் நிலை
அதுவே வாழும் கலை



கூத்தாடி சிவத்தோடு-எப்போதும்
ஆனந்த கூத்து -ஆசை எரித்த மனதில்
சுடலையாண்டியோடு தந்தை, மகன் உறவு

ஆசை மனதிற்கு நிம்மதியில்லை,பேராசையால் மனம் நாறிட
சுடுகாட்டில் அவன் வாழ்வு, மண்டையோட்டுக்குள் நிரம்பாத
அவன் ஆசைக் கனவு, ஒன்று குறைய நூறு பொன் இருந்தும்
ஒன்றுக்காய் நிம்மதியை தொலைத்த மூடனாய் வாழ்வு



சித்தனாய் சித்தமறுத்து-சிவத்தோடு உறவு கொண்டு
அன்பே சிவமாய் வாழ்பவனுக்கு
பட்டம், பதவி, பணம், காசு-காலில் ஒட்டிய தூசு

வானம்பாடிகளுக்கு கூடுகள் இல்லை-கூண்டுக்கிளிகள
தம் சிறையை உணர்வதில்லை, கூண்டுக் குயில்கள்
கானம் பாடுவதில்லை, இறக்கை வளர்ந்திட-குஞ்சுகள்
எழுந்து பறப்பதே தாய் தந்தை விரும்பும் சுந்தர நிலை

***அழியும் செல்வமெல்லாம் வெளியே, அழியாச் செல்வம் நம்முள்ளே***
அறிந்தால் ஆனந்தமே,

நட்ட கல்லைச் சற்றி வந்து, நாலு புஷ்பம் சாத்தி-
நெற்றியில் நீறு வைத்தாலும்-ஆசை நெஞ்சில் பற்றியெரியும்
பேராசைகளை அவிக்காதவன் மனதில் நிம்மதி இல்லை
தன் வாலை கவ்விட அலையும் நாயின் அலைச்சல் ஓய்வதில்லை

முற்றும் துறந்த சித்தனுக்கு சிவமே சொத்து
அழியும் பொன், பொருள், அதிகாரம் புகழ் அவனுக்கேது,
துறவிக்கு வேந்தனும் துரும்பு



காட்டுக்கு போனாலும்- ஸ்ரீராமன், வேடனில்லை-ஆண்டியாய்
நின்றாலும் பழனி முருகன் ஏழையில்லை-கல்லோடு
வைரம் கிடந்தாலும் கூழாங்கல் இல்லை,
தன்னையறிந்தவனுக்கு தாழ்வு என்றுமில்லை

பசும்பொன்னால் செய்தாலும்-மங்கையருக்கு
பலவேளை மணவாழ்கை பொன்விலங்கே
அன்பால் ஆட்கொண்டு-மாயக் கண்ணணையும்
கட்டிப்போட்டவன் சஹாதேவனே் ஒருவனே

பிட்டுக்கு மண் சுமந்த பெருமான் கூலியில்லை
உழைப்பை உறிஞ்சும் அட்டைகளுக்கு உதிரமே உணவு
அதிகாரமே கனவு, சமத்துவம் என்பது அற்புதக் கனவு
பொதுவுடமை என்பது தோற்றுப்போன நிகழ்வு

முடி சார்ந்த மாமன்னரும் முடிவில் பிடி சாம்பலானார்
முடிதுறந்த சித்தார்தன் மனமாளும் புத்தரானார்
முள்முடி சூடியவரோ வாழும் இறை மகனனானர்
வாழ்வு ஒரு கொடை-விழிப்புணர்வே ஒளி

மாங்காய்ப்பாலுண்டு மலைமேலிருப்பவனுக்கு
தேங்காய்ப்பால் ஏதுக்கடி குதம்பாய்
மதவாதம் ஓதி மானுடத்தை பிரிப்பவனுக்கு
அன்பே தெய்வம் கோஷமடி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra- 17-08-2023*

# யாத்திரை

---

வந்தபோது மகிழ்ந்து பிறப்பென்றோம்
சென்றபோது-அழுது இறப்பென்றோம்
மெய் போடும் கோலங்கள் தினம் மாறிட
பிறப்பும், இறப்பும் வாழ்வின் மாறாத நியதிகளே

மானிட நீ உடல் அல்ல அழியாத ஆன்மா
சத்திய யாத்திரையில்
இறங்கி, இடம் மாறும் இடங்களுக்கு
ஏனிந்த உணர்வின் நெகிழ்ச்சிகளோ?

உண்மையின் தேடலில்-எல்லோரும் புனித யாத்ரீகரே
ஓரடி எடுத்தவரும், உண்மையோடு ஒன்றானவரும்
தேவனின் குழந்தைகளே.

## ஞான ஒளி

என் இரவுக்கு ஒளி கொடுக்க- நிலவைக் கேட்டேன்
அவளோ அமாவாசை என்றாள்
என் வெயிலுக்கு நிழல்தர மரங்களைக் கேட்டேன்
அவைகளோ இலையுதிர்காலம் என்றன

என் நெஞ்சுற்ற நீள்விடாய் தணிக்க-
கடலிடம் நீர் கேட்டேன்-அதுவோ உப்பு என்றது
வெம்மை தணித்திட- மந்தமாருதம் கேட்டேன்
சண்டமாருதம் வீசியது

பாடும் குயிலிடம் பண் கேட்டேன்-சோகப் பண் ஒலித்தது
தேடிக் களைத்தபின்-அனைத்தும் இழந்தபின்
ஆண்டவனைச் சரணடைந்தேன்

தேடல் ஓய்ந்து,. கேட்டல் ஒழித்து
தட்டல் தவிர்த்து-மனம் கழிந்திட
சும்மா ஓய்ந்திருந்தேன்
சத்-சித்- ஆனந்தமானேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-10-2013